நாங்கள்
டால்டாவினால்தான் சமையல்
செய்து எங்களுடைய
தினசரி சக்தியை ஈடு
செய்துகொள்கிறோம்




டால்டா-சமனிலே
உணவில் உங்களுக்கு தேவை
யான சக்திதரும் கொழுப்பை
அளிக்கிறது

HVM. 165-50 TM



# கல்கி பொருளடக்கம்


மலர் 11 | இதழ் 27

1952 பிப்ரவரி 3

கர ஹு | தை 21




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 27

# அரசியல் நெருக்கடி

சென்னை மாகாணத்தில் முதல்தரமான அரசியல் நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. இதைப் பற்றி யாதொரு சந்தேகமும் இல்லை. ஆனால் அந்த நெருக்கடியை எப்படித் தீர்த்து வைப்பது என்பது பற்றிப் பல சந்தேகங்கள் ஏற்படத்தான் செய்யும்; வாதப் பிரதிவாதங்களும் நடந்தே தீரும். ஆகையால் நாமும் அந்த நெருக்கடி இன்னதென்பதைப் பற்றியும் அதை இன்னின்ன வழிகளில் தீர்க்கலாம் என்பது பற்றியும் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

புதிய தேர்தலின் முடிவாக அமையப்போகும் சென்னைச் சட்டசபையில் எந்தக் கட்சியும் திட்டமான பெரும்பான்மை ஸ்தானங்களை அடையவில்லை. ஆகையால் எந்தக் கட்சியும் தன் சொந்த பலத்தைக் கொண்டு மந்திரி சபையை அமைக்க முடியாது. இதுதான் இப்போது இம்மாகாணத்தில் ஏற்பட்டிருக்கும் அரசியல் நெருக்கடி.

இந்த நெருக்கடியை மூன்று வழிகளில் தீர்த்து வைக்க முயற்சி செய்யலாம். அந்த வழிகளை ஒவ்வொன்றாகக் கவனிப்போம்.

முதல் வழி :—எல்லாக் கட்சிகளுக்குள்ளும் அதிக ஸ்தானங்களைப் பெற்றிருக்கும் தனிப்பட்ட கட்சி காங்கிரஸ் கட்சிதான். ஆகையால் காங்கிரஸ் வேறு கட்சிகளுடன் கூட்டுச் சேர்ந்தோ, அல்லது வேறு கட்சிகளின் ஆதரவை நம்பியோ, அல்லது சுயேச்சையாளரைச் சேர்த்துக் கொண்டோ மந்திரிசபை அமைக்கலாம்.

அப்படி ஏற்படும் காங்கிரஸ் மந்திரிசபை ஸ்திரமான நல்ல அரசாங்கத்தை நிறுவ முடியாது. நாட்டில் அமைதியை நிலைநாட்ட முடியாது. நீண்டநாள் ஆட்சி நடத்தவும் முடியாது.

சென்னைச் சட்டசபையில் சென்ற தடவை காங்கிரஸ் கட்சி மகத்தான மெஜாரிட்டி பலத்தைப் பெற்றிருந்தது. அப்படியிருந்தும் மந்திரிசபை அடிக்கடி மாறி அரசாட்சி சீர்குலைந்தது. அதன் பலனை ஓரளவு இந்தப் பொதுத் தேர்தலில் பார்த்தோம்.

இப்போதுள்ள நிலைமையில் காங்கிரஸ் கட்சி வேறு எந்தக் கட்சியுடன் கூட்டுச் சேர முடியும்? மற்ற எல்லாக் கட்சிகளும் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களை எதிர்த்துப் போராடியவை. அவ்விதம் போராடி வெற்றி பெற்று ஐந்தாறு கட்சிகள் சிறிய சிறிய கூட்டங்களாக வந்திருக்கின்றன. இந்தக் கட்சிகளின் திட்டங்கள் காங்கிரஸ் திட்டங்களுடன் பெரிதும் மாறுபட்டவை. அஹிம்சையில் நம்பிக்கையற்றவர்கள், மதுவிலக்கை அடியோடு எதிர்ப்பவர்கள், வகுப்புவாத அடிப்படையில் தேர்தலுக்கு நின்றவர்கள், வகுப்புத் துவேஷத்தைப் பரப்புகிறவர்கள், இவர்களுடன் காங்கிரஸ் கூட்டுச் சேர முடியுமா?

சுயேச்சையாக நின்று வெற்றி பெற்றவர்களில் இரண்டொருவரைத் தவிர மற்றவர்கள் காங்கிரஸின் பரம விரோதிகள்; காங்கிரஸ் இலட்சியங்களுக்கெல்லாம் விரோதிகள்; அவர்கள் காங்கிரஸுடன் சேர முன்வரும் பட்சத்தில் மந்திரி பதவிக்காகவே வருவார்கள். அத்தகையவர்களுடன் காங்கிரஸ் கட்சி கூட்டுச் சேர முடியுமா?

தேர்தலுக்கு முன்னால் பண்டித ஜவாஹர்லால் நேரு செய்த பிரசங்கங்களிலெல்லாம் இதரக் கட்சிக்காரர்களைக் காட்டிலும் சுயேச்சை அபேட்சகர்களையே மிகவும் அதிகமாகக் கண்டித்திருக்கிறார்.

சுயேச்சையாளருடன் காங்கிரஸ் கட்சி சேர்வது அல்லது அவர்களைச் சேர்த்துக் கொள்வது பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்களின் தேர்தல் பேச்சுக்களையெல்லாம் பொய்ப் படுத்துவதாக முடியும்.

ஆகையால் காங்கிரஸ் கட்சியார் மற்றவர்களுடன் சேர்ந்து கூட்டு மந்திரிசபை அமைப்பதில் அபாயம் அதிகம் இருக்கிறது.

இம் மாகாணத்தில் காங்கிரஸுக்கு இப்போது எஞ்சியிருக்கும் மதிப்பும் அதனால் குன்றிவிடும்.

"சென்னை காங்கிரஸ்வாதிகள் மந்திரி பதவி மோகம் கொண்டவர்கள். மந்திரி பதவிக்காக இலட்சியங்களைக் காற்றில் பறக்க விட்டு விடக் கூடியவர்கள்; எதுவும் செய்யக் கூடியவர்கள்" என்ற அபிப்ராயம்தான் ஸ்திரமாகும்.

அத்தகைய கூட்டு மந்திரி சபை நீடித்து நிற்பது மிகவும் சந்தேகந்தான். எனவே தற்போதைய நிலையில் காங்கிரஸ் கட்சி மந்திரிசபை அமைப்பதினால் காங்கிரஸுக்கும் நன்மையில்லை; நாட்டுக்கும் நலம் விளையாது.

இரண்டாவது வழி :—இப்போதைய நிலைமையில் காங்கிரஸ் கட்சி மந்திரி சபை பொறுப்பை ஏற்க மறுதளித்து விடலாம்.

மறுத்து விட்டு நிர்மாணத் தொண்டில் தீவிரமாக ஈடுபடலாம். இழந்து விட்ட பொதுஜனத் தொடர்பை மீண்டும் ஏற்படுத்திக் கொள்ள முயலலாம். இதன் மூலம் காங்கிரஸ் ஸ்தாபனம் பலம் பெறும் என்பது நிச்சயம்.

ஆனால் காங்கிரஸைத் தவிர்த்த மற்றக் கட்சிக்காரர்கள் சிலர் கூட்டுச் சேர்ந்துப் பதவி மோகங் கொண்ட சுயேச்சை வாதிகளையும் சேர்த்துக் கொண்டு—மந்திரி சபை அமைக்க முயல்வார்கள்.

இலட்சியப் பற்றும் திடமான கொள்கையும் இல்லாதவர்களாதலால் அவர்கள் அத்தகைய முயற்சியில் ஆரம்பத்தில் வெற்றிபெறக் கூடும்.

அதாவது மற்றக் கட்சிக்காரர்கள் கூட்டு மந்திரி சபை அமைத்து விடுவார்கள். அத்தகைய கூட்டு மந்திரி சபை சிறிது காலந்தான் நடக்கும். ஆனால் அந்தச் சிறிது காலத்தில் இம்மாகாணத்துக்குப் பல தீமைகளை அவர்கள் செய்துவிடக் கூடும்.

காலஞ்சென்ற வியாகத் அலிகான் வைஸ்ராய் வேவல் அமைத்த கூட்டு மந்திரி சபையில் ஒன்பது மாதந்தான் பொருளாதார மந்திரியா யிருந்தார். அந்த ஒன்பது மாதத்திலேயே இந்தியாவின் பொருளாதாரத்தைச் சீர்குலைக்க எத்தனையோ காரியங்களைச் செய்து விட்டார்.

அம்மாதிரி, காங்கிரஸ் எதிர்ப்பு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட மந்திரிசபை சிலமாத காலம் நடந்தாலும், அதனால் மாகாணம் சீர்குலைந்து விடும். நாட்டின் அமைதிக்குப் பங்கம் ஏற்படும்.

ஆகையால் இரண்டாவது வழியிலும் அபாயம் அதிகம் இருக்கத்தான் செய்கிறது.

மூன்றாவது வழி :—சிறிது காலத்துக்கு மத்திய அரசாங்கத்தின் சொந்தப் பொறுப்பில் சென்னை இராஜ்ய சர்க்கார் நடைபெற வேண்டும்.

இந்த இடைக்காலத்தில் சென்னை இராஜ்யத்தைப் பாஷாவாரி மாகாணங்களாகப் பிரிப்பதற்குத் துரிதமாக ஏற்பாடு செய்ய வேண்டும்.

அவ்விதம் பிரித்த பிறகு எந்த மாகாணத்தில் ஏதாவது ஒரு கட்சிக்கு மெஜாரிட்டி பலம் இருக்கிறதோ, அந்தக் கட்சியைக் கொண்டு மந்திரி சபையை அமைக்கச் செய்யலாம்.

மெஜாரிட்டி உள்ள கட்சியே யில்லாமல் பல சில்லறைக் கட்சிகளாகவே இருக்கும் பாஷாவாரி மாகாணங்களில் மறுபடியும் தேர்தல் நடத்தலாம்.

## மன மாற்றம்!




அமெரிக்க ஜனாதிபதி ட்ருமனால் ஐரோப்பாவில் மகோன்னத தளபதியாக நியமிக்கப்பட்ட ஜெனரல் ஐஸன்ஹோவர் ட்ருமனுக்குப் போட்டியாகத் தேர்தலுக்கு நிற்க உத்தேசித்திருக்கிறாராம்.




எகிப்து பிரதம மந்திரி நஹாஸ் பாஷாவை எகிப்து மன்னர் 'டிஸ்மிஸ்' செய்து விட்டார். எகிப்து பார்லிமெண்டில் பெரும்பான்மையோர் அடங்கிய வப்துக் கட்சித் தலைவரை மேற்படி பதவியிலிருந்து விலக்கியதன் மூலம் எகிப்து நெருக்கடி தீர்ந்து விடுமா?

இந்த மூன்றாவது வழியை அரசியல் பண்டிதர்கள் ஆட்சேபிக்கக் கூடும்.

"அது எப்படி மத்திய சர்க்கார் மாகாண சர்க்காரை நடத்துவது! ஜனநாயகம் என்ன ஆவது! தேர்தல் முடிவும் ஜனங்களின் தீர்ப்பும் என்ன ஆவது!" என்று கேட்கக் கூடும்.

முதலில் இது தற்போதைய அரசியல் நெருக்கடியைச் சமாளிப்பதற்கான தாற்காலிக ஏற்பாடு என்பதை அவர்கள் நினைவுகூர வேண்டும்.

இரண்டாவதாக, ஜனநாயகத்தின் இன்றியமையாத விபந்தனை, நாட்டில் அமைதியை நிலை நாட்டுவதுதான் என்பதையும் அவர்கள் உணரவேண்டும். சென்னை மாகாணத்துக்கு இப்போது அத்தியாவசியமான தேவை அமைதியும் ஒழுங்குமாகும்.

இந்தத் தேர்தலின் முடிவு ஏற்கெனவே தஞ்சை ஜில்லா விவசாயிகளிடையே ஒருவித பீதியை உண்டாக்கி யிருக்கிறது. நில விலை குறைந்து வருகிறது. நிலத்தை விற்பதற்குப் பலர் விரும்புகிறார்கள். வாங்குவோர் குறைந்து விட்டார்கள்.

தஞ்சை ஜில்லாவின் உபரி நெல் விளைவுதான் மற்றத் தமிழ் ஜில்லாக்களின் பற்றாக் குறையை இப்போது தீர்த்து வருகிறது.

தஞ்சை ஜில்லாவின் விவசாயம் பாதிக்கப்பட்டால் அடுத்த வருஷம் தமிழ் நாட்டில் கோரமான பஞ்சம் தலை விரித்தாடுவது நிச்சயம். அந்த நிலைமை ஏற்படுவதை மத்திய சர்க்கார் அனுமதிக்க முடியாது.

மாகாண அரசாங்கம் ஸ்திரமாக ஏற்படாமல் சில மாதங்களுக்கு ஒரு முறை மாறிவந்தால் இம் மாகாணத்தின் விவசாயம் நிச்சயம் பாதிக்கப்படும். அதனால் பற்றாக்குறையும் பஞ்சமும் பன்மடங்கு அதிகமாகும். பஞ்சத்திலிருந்து நாட்டின் அமைதி குலையும், குழப்பம் விளையும்.

இந்த விபத்துகளை யெல்லாம் தடுப்பதற்கு மத்திய அரசாங்கம் சென்னை இராஜ்ய சர்க்காரைத் தாற்காலிகமாக ஏற்று நடத்துவது ஜனநாயகத்துக்கு ஒருகாலும் முரணாகாது.

மேலே குறிப்பிட்ட மூன்று வழிகளிலும் சில குறைபாடுகளும் அபாயங்களும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் மூன்றாவது வழியிலேதான் குறைபாடுகளும் அபாயங்களும் மிகக் குறைவு என்று நாம் கருதுகிறோம்.

பிப்ரவரி மாதம் 2ல் காங்கிரஸ் காரியக் கமிட்டியார் கூடப் போகிறார்கள். இந்த மாகாணத்தின் அரசியல் நெருக்கடி குறித்தும் ஆலோசிக்கப் போகிறார்கள்.

அவர்கள் தீர்க்காலோசனையின் பேரில் கூறும் முடிவு எதுவானாலும் அதைச் சென்னை இராஜ்ய காங்கிரஸ்வாதிகள் மனப்பூர்வமாக ஏற்று அமுல் நடத்துவார்கள் என்று நம்புகிறோம்.

இது விஷயத்தில் பம்பாய் மந்திரி மொரார்ஜி தேசாய் நாட்டுக்கே நல்வழி காட்டியிருக்கிறார்.

பம்பாயில் காங்கிரஸ் அமோகமான வெற்றி அடைந்திருக்கிறது. பம்பாய்ச் சட்ட சபையில் மிகப் பெரும்பான்மை ஸ்தானங்கள் காங்கிரஸுக்குக் கிடைத்திருக்கின்றன. ஆனால் புதிய சட்ட சபையில் காங்கிரஸ் கட்சித் தலைவரா யிருப்பார் என்று கருதப்பட்ட ஸ்ரீ மொரார்ஜி தேசாய் ஒரு சில வோட்டுக்களினால் தோல்வி யடைந்தார்.

“நீங்கள் மேலே என்ன செய்யப் போகிறீர்கள்! வேறு தொகுதியில் நின்று வருவீர்களா!” என்று கேட்டதற்கு ஸ்ரீ மொரார்ஜி தேசாய், “**காங்கிரஸ் மேலிடத்தின் கட்டளைப்படி நடப்பேன்**” என்று தயங்காமல் பதில் கூறினார். இத்தகைய சிறந்த மனப்பான்மைதான் பம்பாய் இராஜ்யத்தில் காங்கிரஸுக்கு அமோகமான வெற்றியை அளித்தது.

அதே மனப்பான்மையைச் சென்னை மாகாணத்துக் காங்கிரஸ் வாதிகளும் மேற்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறோம். தேர்தலில் தோற்றவர்கள், ஜெயித்தவர்கள், விலகி நின்றவர்களுக்கெல்லாம் விண்ணப்பம் செய்து கொள்கிறோம்.

அவ்விதம் காங்கிரஸ் மேலிடத்தின் கட்டளைக்கு உட்பட்டுக் கட்டுப்பாட்டுடன் நடந்து வந்தால், கூடிய சீக்கிரத்தில் இம் மாகாணத்தில் காங்கிரஸ் இழந்துவிட்ட செல்வாக்கை மீண்டும் அடையும் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

# உலகம் கண்டிராத புதுமைகள்!

சென்ற வாரத்திலே சென்னையில் உள்ள ரேஷன் கடை ஒன்றுக்குச் சில ஏழைப் பெண்மணிகள் வெகு உற்சாகத்துடன் சென்றார்கள். ஒரு நாளும் இல்லாமல் அவ்வளவு குதூகலத்துடன் தமது கடைக்கு வந்த அவர்களைப் பார்த்துக் கடைக்காரர் ஆச்சரியப்பட்டுப் போனார்.

வழக்கம்போல் அவர்களுக்கு ரேஷன் தானியங்கள் கொடுக்கப்பட்டன. அவ்வளவு தான்! அதைக் கண்டதும் அந்தப் பெண்கள் அப்படியே திகைத்து நின்று விட்டார்கள். சில விநாடிகளுக்கு முன் அவர்களுடைய முகத்தில் தாண்டவமாடிய மகிழ்ச்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்து கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. “இது என்ன அக்கிரமம்! ஏன் இப்படி ஏழைகளின் வயிற்றில் அடிக்கிறீர்கள்! இந்த வாரத்திலிருந்து பதினறு அவுன்ஸ் அரிசி கொடுப்பதாகத் தண்டோரா போட்டார்கள். நீங்கள் ஆறு அவுன்ஸ் அரிசி தானே கொடுத்திருக்கிறீர்கள்!” என்று கூக்குரலிட்டார்கள்.

அந்தத் தொகுதியில் தேர்தலுக்கு நின்று வெற்றிபெற்ற அபேட்சகர் தமக்கு வோட்டுக் கொடுத்தால் உடனே பதினறு அவுன்ஸ் அரிசி வழங்கும்படி செய்வதாக உறுதி அளித்தாராம். அவருக்கு வோட்டுப் போட்ட அந்தப் பெண்கள் ஆத்திரப் படுவதற்கு அதுதான் காரணம் என்பது தெரிந்தது!

தேர்தலில் காங்கிரசுக்கு விரோதமாக நடந்துள்ள பிரசாரத்தின் இலட்சணத்துக்கு இது ஒரு சிறிய உதாரணம்!

• • •

ஒருபடியாக இந்தியாவின் முதலாவது பொதுத் தேர்தல்கள் அநேகமாக முடிவடைந்து விட்டன.

இந்தத் தேர்தல்களில் உலகமே கண்டிராத பல புதுமைகளைக் கண்டோம்.

எழுத்தறிவில்லாத, கோடிக்கணக்கான மக்கள் முதன் முதலாகக் கலந்துகொண்ட எந்தத் தேர்தலும் இவ்வளவு அமைதியாக நடந்ததில்லை.

காங்கிரஸ் சர்க்கார் அவ்வளவு ஒழுங்காகவும் திறமையாகவும் தேர்தல் ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். முதல் தடவையாக வாக்குரிமை பெற்றுள்ள பாமர ஜனங்களும் அமைதியாகச் சென்று தங்கள் வாக்குகளைக் கொடுத்தனர்.

அடுத்துள்ள புதுச்சேரியிலும் ஜனநாயகத்தில் திளைத்த வெளிநாடுகள் சிலவற்றிலும் தேர்தலின் போது நடக்கும் கோரமான கலகங்களைக் கவனிப்போர், இங்கு தேர்தல்கள் இதுவரையில் அமைதியாக நடந்ததற்குக் காரணஸ்தர்களான சர்க்கார் அதிகாரிகளையும் பொது மக்களையும் பாராட்டுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

இந்தியாவில் தேர்தல்கள் யோக்கியமாகவும் ஒழுங்காகவும் திறமையுடனும் நடந்துள்ளன என்று வெளி நாடுகளில் உள்ள பிரபல பத்திரிகைகள் பாராட்டியிருக்கின்றன.

இந்தியாவுக்கு விஜயம் செய்துள்ள இந்தோனேஷ்யத் தூதுகோஷ்டியாரும் வெகுவாகப் பாராட்டியிருக்கிறார்கள்.

**இதெல்லாம் பாரதநாட்டு மக்களுக்குப் பெருமை அளிக்கக் கூடிய அம்சம் அல்லவா?**

தேர்தல் சம்பந்தமாக இதைத் தவிர மற்றும் சில புதுமைகளும் நிகழ்ந்தன.

உலகத்தில் உள்ள வேறு எந்த நாட்டிலும் எக்காலத்திலும் இத்தனை கட்சிகள் தேர்தலில் போட்டி போட்டதில்லை.

ஒவ்வொரு தொகுதிக்கும் ஏறக்குறைய இரண்டு டஜன் அபேட்சகர்கள் நின்றதில்லை

எந்த நாட்டிலும் இவ்விதம் ஆயிரக் கணக்கான அபேட்சகர்கள் படுதோல்வியுற்று ஜாமீன் தொகையை இழந்ததில்லை.

**ஆனால் இவையெல்லாம் பெருமை அடையக் கூடிய அம்சங்கள் அல்ல.**

• • •

இந்தத் தேர்தலில் யாரும் மறுக்க முடியாத சில உண்மைகள் வெளியாயின

அதாவது இந்திய பிரிவினைக்குக் காரணமாக இருந்த முஸ்லிம் லீகைச் சேர்ந்த பல அபேட்சகர்கள் வெற்றி பெற்றார்கள்.

இது காங்கிரஸ் சர்க்காரின், இந்திய மக்களின் சகிப்புத் தன்மையைக் காட்டுகிறது.

இன்று பாகிஸ்தானில் ஒரு காங்கிரஸ் அபேட்சகரோ அல்லது ஒரு ஹிந்து மகாசபை அபேட்சகரோ தேர்தலுக்கு நிற்கமுடியுமா! அப்படியே நிற்க அனுமதிக்கப்பட்டாலும் அவர் வெற்றி பெற முடியுமா! முடியவே முடியாது.

ஹிந்து மகாசபையின் தலைவரான டாக்டர் காரே தேர்தலில் தோல்வியுற்றதுடன், ஜாமீன் தொகையையும் இழந்தார். ஹிந்து மகாசபை அபேட்சகர்களில் அநேகமாக எல்லோருமே படுதோல்வி யடைந்தனர்.

இதிலிருந்து இந்திய மக்கள் வகுப்புவாதத்தைச் சிறிதும் ஆதரிக்கவில்லை என்பது தெரிகிறது அல்லவா! பாகிஸ்தான் தலைவர்களும் சில வெளி நாட்டுப் பத்திரிகைகளும் 'ஹிந்துக்கள் இந்தியா' என்று கூறுவது ஆதாரமற்ற அபத்தம் என்பது வெளியாகிறது அல்லவா!

# பொன்னியின் செல்வன்

கல்கி

நாலாம் அத்தியாயம்

## தாழைப் புதர்

நடுக் கடலில் படகு தொட்டில் ஆடுவதுபோல் உல்லாசமாக ஆடிக் கொண்டு சென்றது. இரண்டு நாளைக்கு முன்னால் அங்கே தென்னை மர உயரம் அலைகள் எழும்பி விழுந்தன என்று கற்பனை செய்வதே கடினமான காரியம்.

படகில் இளவரசர் பொன்னியின் செல்வரும் வந்தியத்தேவனும் பூங்குழலியும் இருந்தனர்.

பூங்குழலியின் கையில் துடுப்பு இருந்தது. ஆனால் அதை அவள் விசையாகப் போடவில்லை. வந்தியத் தேவனுக்கும் இளவரசருக்கும் நடந்த சம்பாஷணையை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

அவர்களும் பேச்சில் கவனமாக இருந்தார்கள். படகு விரைவாகப் போக வேண்டுமென்று ஆவல் கொண்டவர்களாகத் தோன்றவில்லை.

படகு கோடிக்கரை சேர்ந்த பிறகு என்ன செய்யவேண்டும் என்பது பற்றித் தான் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். இளவரசர் தஞ்சாவூருக்குப் போகக் கூடாது என்றும், பழையாறைக்கு வரவேண்டும் என்றும் வந்தியத் தேவன் வாதிட்டுக் கொண்டிருந்தான். அதற்குப் பல காரணங்களை அவன் எடுத்துச் சொன்னான்.

"தங்கள் சகோதரி தங்களை மிக அவசர காரியமாகப் பார்க்க விரும்புகிறார். தங்களைக் கையோடு அழைத்துக்கொண்டு வருவதாக வாக்களித்து வந்திருக்கிறேன். அதை நிறைவேற்றி வைக்க வேண்டும்" என்று மன்றாடினான்.

"உன் வாக்கை நிறைவேற்றுவதற்காக என் தந்தையின் கட்டளையை மீறச் சொல்லுகிறாயா?" என்று இளவரசர் கோபமாகக் கேட்டார்.

"அது தங்கள் தந்தையின் கட்டளையில்லை; பழுவேட்டரையரின் கட்டளையல்லவா?" என்றான் வந்தியத்தேவன்.

அதோடு இன்னொன்றும் சொன்னான்: "சக்கரவர்த்தியைத் தாங்கள் பார்க்கப் போவதாயிருந்தாலும் சுதந்திரமாகப் பார்க்கப் போவது நல்லதா? பழுவேட்டரையர்களின் சிறையாளியாகப் பார்க்கப் போவது நல்லதா? நான் சொல்கிறேன், கேளுங்கள். 'தங்களைப் பழுவேட்டரையர்கள் சிறைப் படுத்தி யிருக்கிறார்கள்' என்ற செய்தி பரவ வேண்டியதுதான். சோழ நாட்டு மக்கள் எல்லாரும் திரண்டு எழுந்து வந்துவிடுவார்கள். தங்களுடைய அருமைத் தாய்நாடு ஒரு பயங்கர ரணகளமாகி விடும். அது நல்லதா என்று எண்ணிப் பாருங்கள்! அப்படிப்பட்ட கேடு சோழ நாட்டுக்கு ஏற்படக் கூடாது என்றுதான் கடவுளே பார்த்து அந்தச் சுழற் காற்றை ஏவி விட்டிருக்க வேண்டும். கடவுளின் விருப்பத்துக்கும் விரோதமாகத் தாங்கள்

சோழ நாட்டில் கலவரத்தை உண்டாக்க விரும்புகிறீர்களா?" என்று கேட்டான் வந்தியத்தேவன்.

அவ்வளவு நேரமும் அவன் சொல்லி வந்த வாதங்களுக்குள் இது இளவரசரின் மனதை ஓரளவு மாற்றியது. தம்மைப் பழுவேட்டரையர்கள் சிறைப்படுத்தி யிருக்கிறார்கள் என்று தெரிந்தால் சோழ நாட்டில் கலவரம் உண்டாவது சாத்தியந்தான். மக்களுக்குத் தம்மிடம் உள்ள அபிமானம் எவ்வளவு மகத்தானது என்பது அவருக்கு ஒருவாறு தெரிந்துதானிருந்தது. ஆகையால் இளவரசர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு "அப்படியே உன் விருப்பத்தை நிறைவேற்ற நான் முடிவு செய்தாலும் அது எப்படி சாத்தியம்? கோடிக்கரையில் பழுவேட்டரையர்களின் ஆட்கள் எனக்காகக் காத்துக் கொண்டிருக்க மாட்டார்களா?" என்று கேட்டார்.

"அதற்கு உதவி செய்ய இந்த ஓடக்காரப் பெண் இருக்கிறாள். கரையில் எத்தனை பேர் காத்திருந்தாலும் அவர்கள் கண்ணில் படாமல் கோடிக்கரைக் காட்டுக்குள் நம்மைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவாள்.—பூங்குழலி! நான் கூறியது காதில் விழுந்ததா? அவ்விதம் செய்ய முடியுமா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

**பூ**ங்குழலி அப்போது ஏழாவது சொர்க்க லோகத்தில் இருந்தாள். இளவரசரைக் கடலிலிருந்து காப்பாற்றிப் படகிலேற்றி அழைத்துக் கொண்டு வந்தது அவளுக்கு எல்லை யில்லாத உள்ளக் களிப்பை அளித்திருந்தது.

கோடிக்கரை சேர்ந்ததும் அவரைப் பிரிய வேண்டுமே என்ற எண்ணம் இடையிடையே வந்து துன்புறுத்திக் கொண்டிருந்தது. மேலும் அவருக்கு எந்த விதத்திலாவது உதவிசெய்ய முடியுமானால், அதைக் காட்டிலும் அவள் பெறக் கூடிய பேறு வேறு என்ன இருக்க முடியும்?

"கோடிக்கரைக்குக் கொஞ்சம் மேற்கே தள்ளிப் படகைக் கொண்டு போனால் அங்கே இருபுறமும் காடு அடர்ந்த கால்வாய் ஒன்று இருக்கின்றது. அதன் வழியாகப் படகை விட்டுக் கொண்டு போகலாம். இருபுறமும் அங்கே சதுப்பு நிலம். சுலபமாக யாரும் வர முடியாது!" என்று பூங்குழலி சொன்னாள்.

"எங்களை அங்கே விட்டு விட்டு நீ கோடிக்கரை போய்த் தகவல் விசாரித்துக் கொண்டு வர முடியும் அல்லவா?"

"முடியும். படகை ஒருவரும் பார்க்க முடியாதபடி நிறுத்துவதற்கு எத்தனையோ இடம் இருக்கிறது."

"இளவரசே! கேட்டீர்களா?" என்றான் வந்தியத்தேவன்.

"கேட்டேன், அப்பா! என்னுடைய தாய் நாட்டில் என்னைத் திருடனைப் போல் பிரவேசிக்கச் சொல்லுகிறாய். திருடனைப் போல் ஒளிந்திருக்கச் சொல்லுகிறாய்" என்றார்.

படகில் சற்றுநேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. பிறகு இளவரசர் "சமுத்திர குமாரி! ஏன் படகை அடியோடு நிறுத்திவிட்டாய்?" என்று கேட்டார்.

பூங்குழலி வந்தியத்தேவனைப் பார்த்து விட்டுத் துடுப்பை வலிக்க ஆரம்பித்தாள்.

"பாவம்! இந்தப் பெண் எத்தனை நேரம் தனியாகத் துடுப்பு வலிப்பாள்? நான் கொஞ்சம் தள்ளிப் பார்க்கிறேன். இங்கே கொடு, அம்மா, துடுப்பை!" என்றான் வந்தியத்தேவன்.

அவனுடைய எண்ணத்தை அறிந்த இளவரசர் புன்னகை புரிந்தார்.

"நண்பனே! உன்னுடைய சூழ்ச்சிகள் எல்லாம் வீண்தான். நான் பழையாறைக்கும் போகப்போகிறதில்லை; தஞ்சாவூரையும் பார்க்கப் போகிறதில்லை. கடவுள் என்னைக் கைலாசத்துக்கே அழைத்துக் கொண்டு போய் விடுவார் போலிருக்கிறது!" என்றார்.

வந்தியத்தேவனும் பூங்குழலியும் பீதியடைந்து இளவரசரை உற்றுப் பார்த்தார்கள். அவர் உடம்பு நடுங்கத் தொடங்கியிருப்பதைக் கண்டார்கள்.

வந்தியத்தேவன் அவர் அருகில் சென்று "ஐயா! இது என்ன? தங்கள் உடம்பு ஏன் நடுங்குகிறது?" என்று கேட்டான்.

"இது குளிர் காய்ச்சல், அப்பனே! இலங்கையில் இந்தக் காய்ச்சல் அதிகம் பரவியிருக்கிறது என்று சொன்னேனே, ஞாபகம் இல்லையா? இந்தச் சுரம் வந்தவர்கள் பிழைப்பது அரிது!" என்று சொன்னார் இளவரசர்.

கடல் நடுவில் கப்பலின் பாய்மரம் இடி விழுந்து பற்றிக் கொண்டபோது கூட வந்தியத்தேவன் அவ்வளவு கலக்கம் அடையவில்லை. இளவரசரின் வார்த்

தைகள் அவ்வளவாக அவனை இப்போது கதி கலங்கச் செய்துவிட்டன.

பூங்குழலியின் கையிலிருந்து துடுப்பு தானாக நழுவிவிட்டது. உடம்பில் ஜீவ சக்தி அடியோடு மங்கிவிட்டது. கண்களில் மட்டும் உயிரின் ஒளி தோன்றியது. அந்தக் கண்களினால் இளவரசரை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

இளவரசரின் உடல் நடுக்கம் அதிகமாகிக் கொண்டேயிருந்தது. சிறிது நேரத்துக் கெல்லாம் தூக்கித் தூக்கிப் போட ஆரம்பித்தது.

"ஐயா! நான் என்ன செய்யட்டும்? சொல்லுங்கள்! ஒன்றும் புரியவில்லையே? படகை எங்கே கொண்டு போகட்டும்? பூங்குழலி! கோடிக்கரையில் வைத்தியர் இருக்கிறார் அல்லவா?" என்று வந்தியத்தேவன் பதறினான்.

பூங்குழலியோ பேசாமடந்தை ஆகியிருந்தாள்.

இளவரசர் திடீரென்று குதித்து எழுந்தார். நடுங்கிக் கொண்டிருந்த அவர் உடம்பு இப்பொழுது நிற்க முடியாமல் தள்ளாடியது.

"என்னை என் தமக்கையிடம் கொண்டு போங்கள்! என்னை உடனே இளையபிராட்டியிடம் கொண்டு போங்கள்!" என்ற வார்த்தைகள் அவருடைய வாயிலிருந்து குளறலாக வெளிவந்தன.

இதைக் கேட்ட வந்தியத்தேவன் குதூகலம் அடைந்தான். அந்தக் குதூகலத்தில் இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்து நின்றான்.

நடுக்கத்துடன் ஆடிக் கொண்டு நின்ற இளவரசர் அடுத்த கணத்தில் "அக்கா! இதோ வருகிறேன்! உன்னைப் பார்க்க இதோ வருகிறேன்! யார் தடுத்தாலும் இனிமேல் கேட்கமாட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே படகிலிருந்து கடலில் பாயப் போனார்.

நல்ல வேளையாக, வந்தியத்தேவன் அப்போது நிலைமை இன்னதென்பதை உணர்ந்தான். இளவரசர் சுரத்தின் வேகத்தினால் சுய உணர்வு இழந்து விட்டார் என்பதை அறிந்து கொண்டான். கடலில் பாயப் போனவரைச் சட்டென்று பிடித்து நிறுத்தினான்.

ஏற்கெனவே மிக்க பலசாலியான இளவரசர் இப்போது சுரத்தின் வேகத்தினால் பன்மடங்கு அதிகபலம் பெற்றிருந்தார். வந்தியத் தேவனுடைய பிடியிலிருந்து திமிறிக் கொள்ள முயன்றார். தன்னால் மட்டும் அவரைத் தடுக்க முடியாது என்பதை வந்தியத்தேவன் கண்டு "பூங்குழலி! பூங்குழலி! சீக்கிரம் ஓடி வா!" என்று அலறினான்.

செயலற்று நின்ற பூங்குழலி உயிர் பெற்றாள். ஒரு பாய்ச்சல் பாய்ந்து இளவரசர் அருகில் வந்து அவரைக் கடலில் விழாமல் தடுப்பதற்காக ஒரு கரத்தைப் பற்றினாள். சுர வேகத்தினால் இளவரசர் பெற்றிருந்த மதயானையின் பலம் உடனே மாயமாய்ப் போய்விட்டது. சின்னஞ் சிறு குழந்தையைப் போல் ஆனார்.

"அக்கா! நீ சொல்கிறபடியே பேசாமல் படுத்திருக்கிறேன். என் பேரில் வருத்தப்படாதே. அக்கா! நீ ஒருத்தி இல்லாவிடில் என்னுடைய கதி என்ன?" என்று இளவரசர் கூறிவிட்டு விம்மினார்.

வந்தியத் தேவனும் பூங்குழலியும் இளவரசரை மெதுவாகப் படகில் படுக்க வைத்தார்கள்.

அதன் பிறகு பொன்னியின் செல்வர் சும்மாப் படுத்திருந்தார். அவருடைய கண்கள் எங்கேயோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தன. அவருடைய வாயிலிருந்து ஏதேதோ வார்த்தைகள் குழறிக் குழறி வந்து கொண்டிருந்தன. சிலவற்றுக்குப் பொருள் விளங்கின. பெரும்பாலும் சம்பந்தமற்ற வார்த்தைகளாகத் தோன்றின.

இளவரசரிடம் ஆலோசனை கேட்பதில் பயனில்லை என்பதை வந்தியத்தேவன் உணர்ந்தான். இந்த மிகப் பயங்கரமான ஆபத்திலிருந்து பொன்னியின் செல்வரைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தன் தலையில் சுமந்திருக்கிறது என்பதையும் அறிந்தான். ஆனால் புத்திசாலியான இந்தப் பெண் ஒருத்தி இருக்கிறாள். இளவரசரைப் பாதுகாப்பதில் தன்னைப் போலவே இவளும் கவலை கொண்டவள் தான். பின்னர், எத்தனையோ அபாயங்களிலிருந்து தன்னைத் தப்புவித்த கடவுளின் கருணையும் இருக்கவே இருக்கிறது.

"பூங்குழலி! படகை இனிமேல் வேகமாகச் செலுத்திக் கொண்டு போக வேண்டியதுதானே?" என்றான் வந்தியத்தேவன்.

பூங்குழலியின் கரங்கள் இழந்திருந்த வலிமையை மீண்டும் பெற்றன. படகு துரிதமாகச் சென்றது.

வந்தியத்தேவன் இளவரசரின் அருகிலேயே உட்கார்ந்திருந்தான். மறுபடியும்

அவர் சுரவேகத்தில் கடலில் குதித்து விட்டால் என்ன செய்வது என்பதை நினைத்தபோதே அவன் கதிகலங்கியது. ஆகையால் சர்வ ஜாக்கிரதையாக அவரைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். அதே சமயத்தில் மேலே செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றி அவன் உள்ளம் தீவிரமாகச் சிந்தனை செய்தது.

"பெண்ணே! உனக்கு என்ன தோன்றுகிறது! நாம் துணிந்து கோடிக்கரைக்கே போய்விடலாமா? இளவரசரைப் பாதுகாப்பதற்கு உன் குடும்பத்தார் உதவி செய்வார்கள் அல்லவா?" என்று கேட்டான்.

"ஐயா! இந்தக் காலத்தில் யாரை நம்பலாம், யாரை நம்பக்கூடாது என்று எப்படிச் சொல்ல முடியும்? என் தமையன் மனைவி ஒருத்தி இருக்கிறாள். அவள் பணத்தாசை பிடித்தவள். என் தந்தைக்குப் படி அளப்பவர்கள் பழுவேட்டரையர்கள்!" என்றாள் பூங்குழலி.

"மேலும், தங்களைப் பிடிக்க வந்த பழுவூர் ஆட்கள் இன்னும் கோடிக்கரையில் தங்கி இருக்கலாம். இளவரசரின் வரவை எதிர்பார்த்து மேலும் பல புதிய ஆட்களும் வந்திருக்கலாம்!" என்று தொடர்ந்து கூறினாள்.

அவளுடைய முன் யோசனையைக் குறித்து வந்தியத்தேவன் வியப்படைந்தான். இந்த இக்கட்டான சமயத்தில் தனக்கு அவளுடைய உதவி கிடைத்ததை எண்ணி மகிழ்ந்தான்.

"அப்படியானால், நேரே கோடிக்கரைக்குப் போவது அபாயம் என்று நீயும் எண்ணுகிறாயா?" என்றான்.

"அதோ பாருங்கள்!" என்று சுட்டிக் காட்டினாள் பூங்குழலி.

அவள் சுட்டிக் காட்டிய திசையில் கப்பல் ஒன்று நின்று கொண்டிருந்தது. அதற்கு அப்பால் கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் உச்சியும் தெரிந்தது.

"ஆகா! பெரிய மரக்கலம் ஒன்று நிற்கிறதே! அது யாருடைய கப்பலோ, என்னமோ! ஒருவேளை பார்த்திபேந்திரனுடைய கப்பலாயிருக்கலாம். அப்படியிருக்குமானால், இந்த நிலையில் இளவரசரைக் காஞ்சிக்கு அழைத்துப் போவதே நல்ல தல்லவா?"

"பழுவேட்டரையரின் கப்பலாகவும் இருக்கலாம். ஐயா! கப்பலுக்குப் பின்னால் ஏதாவது தெரிகிறதா?"

"கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் உச்சி தெரிகிறது."

"அதில் ஏதாவது வித்தியாசமாகக் காணப்படுகிறதா?"

"எனக்கு ஒன்றும் வித்தியாசமாய்த் தெரியவில்லையே!"

"எனக்குத் தெரிகிறது. அந்த உச்சியில் கூட்டமாக மனிதர்கள் நின்று கடலை உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது."

"அங்கிருந்து பார்ப்பவர்களுக்கு இந்தப் படகு தெரியுமா?"

"தெரியாது. இன்னும் கொஞ்சம் கரையை நெருங்கினால் தெரியும்."

"எல்லாவற்றுக்கும் நாம் முன் ஜாக்கிரதையாக இருப்பதே நல்லது. நீ முன்னம் சொன்னாயே கோடிக்கரைக்கு மேற்கே கால்வாய் ஒன்று இருக்கிறதென்று? அங்கேயே படகை விடலாமா?"

"அப்படித்தான் செய்ய வேண்டும். இருட்டுகிற சமயத்துக்கு அங்கே போய்ச் சேரலாம். ஐயா! நீங்கள் ஒரு நாள் இருண்ட மண்டபத்தில் ஒளிந்திருந்தீர்களே? அதற்கு வெகு சமீபம் வரையில் அந்தக் கால்வாய் வருகிறது. இளவரசருடன் தாங்கள் சற்று நேரம் அங்கே தாமதித்தால் நான் போய் எல்லாவற்றையும் விசாரித்துக் கொண்டு விரைவில் வந்து சேருகிறேன்."

"கால்வாய் அங்கேயே நின்று விடுகிறதா, பூங்குழலி! மேலும் எங்கேயாவது போகிறதா?"

"கோடிக்கரையிலிருந்து நாகைப்பட்டினம் வரையில் அந்தக் கால்வாய் போகிறது" என்றாள் பூங்குழலி.

இந்தச் சமயத்தில் பொன்னியின் செல்வர் சுரவேகத்தில் தனக்குத்தானே பேசிக் கொண்டது கொஞ்சம் உரத்த சத்தத்துடன் கேட்டது.

"ஆமாம், அக்கா, ஆமாம்! நாகைப்பட்டினத்துப் புத்த பிக்ஷுக்கள் சொன்னதாகக் கூறினாயே? அதன்படியே நடந்தது. அநுராதபுரத்தில் புத்த பிக்ஷுக்களின் மகா சங்கத்தார் எனக்கு இலங்கைச் சிங்காதனத்தையும் கிரீடத்தையும் அளிக்க முன் வந்தார்கள். நான்தான் மறுத்துவிட்டேன், அக்கா! இராஜ்யத்தில் எனக்கு ஆசையில்லாதபடியால்தான் மறுதளித்தேன். நீ வேறு எது சொன்னாலும் கேட்கிறேன். இராஜ்யம் ஆளும் தொல்லை மட்டும் எனக்கு

வேண்டாம்! அதைக் காட்டிலும் கடலில் படகு விட்டுக்கொண்டு எவ்வளவோ ஆனந்தமாயிருக்கலாம். கேள், அக்கா! கோடிக் கரையில் ஓடக்காரப் பெண் ஒருத்தி இருக்கிறாள்......"

இதைக் கேட்ட பூங்குழலியின் உடம்பெல்லாம் புளகாங்கித மடைந்தது. வந்தியத்தேவனுக்கோ ஆத்திரம் வந்தது. மேலே என்ன சொல்லப் போகிறாரோ என்று கேட்க இருவரும் அடங்கா ஆர்வம் கொண்டிருந்தனர். ஆனால் திடீரென்று இந்த இடத்தில் இளவரசருக்குச் சுய உணர்வு கொஞ்சம் வந்ததாகத் தோன்றியது.

சுற்றுமுற்றும் விழித்துப் பார்த்துவிட்டு, "இன்னும் கோடிக்கரை வரவில்லையா?" என்று ஈன சுவரத்தில் கேட்டார் இளவரசர்.

வந்தியத் தேவன் "அதோ கரை தெரிகிறது!" என்றான். இளவரசரிடம் யோசனை கேட்கலாமா, வேண்டாமா என்று அவன் யோசிப்பதற்குள் மீண்டும் இளவரசர் நினைவை இழந்து சுரப் பிராந்தி உலகத்துக்குப் போய்விட்டார்.

* * *

இளவரசர் 'கடைசியாக ஓடக்காரப் பெண்'ணைப்பற்றிக் கூறிய வார்த்தைகள் பூங்குழலியின் மனதில் என்ன அலைகளை எழுப்பிவிட்டிருந்தன. வந்தியத் தேவனையும் இளவரசரையும் பார்ப்பதற்கே அவளுக்குக் கூச்



சமாயிருந்தது. ஆகையால் படகு சென்ற திசையையே பார்த்த வண்ணம் துடுப்பைப் போட்டுக்கொண்டிருந்தாள். அது காறும் கப்பல் நின்ற இடத்தை நோக்கிச் சென்ற படகு இப்போது திசை திரும்பித் தென் மேற்குப் பக்கமாகச் சென்று கொண்டிருந்தது.

இருட்டுகிற நேரத்தில் கடலிலிருந்து பூமிக்குள் குடைந்து சென்ற கால்வாயின் உள்ளே பிரவேசித்தது.

பூங்குழலி கூறியது போலவே அங்கே இருபுறமும் கரைகள் உயர்ந்த மேடாக இருந்தன. அந்த மேட்டுக் கரைகளில் மரங்கள் அடர்த்தியாகவும் உயரமாகவும் வளர்ந்திருந்தன.

படகைக் கரையோரமாக நிறுத்தி விட்டுப் பூங்குழலி மெல்லிய குரலில் "ஐயா! சற்றுப் படகைப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லி விட்டுக் கரையில் இறங்கினாள். கரையில் வளர்ந்திருந்த உயரமான ஒரு மரத்தின் மேல் ஏறிச் சுற்று முற்றும் பார்த்தாள். பிறகு அவசரமாக இறங்கி வந்தாள். "நல்ல வேளை! இங்கே வந்தோம். கடற்கரையோரமாகச் சுமார் ஒரு காத தூரத்துக்கு ஆட்கள் நின்று காவல் புரிகிறார்கள். கலங்கரை விளக்கின் அருகில் ஒரே கூட்டமும் கோஷமுமாக இருக்கிறது!" என்றாள்.

"யாராயிருக்கும் என்று ஏதாவது தெரிகிறதா?" என்று வந்தியத்தேவன் ஆவலுடன் கேட்டான்.

"நன்றாய்த் தெரியவில்லை. ஆனால் பழுவேட்டரையரின் ஆட்களாய்த்தான் இருக்க வேண்டும். வேறு யாரா யிருக்க முடியும்? எப்படி யிருந்தாலும், நான் சொன்ன இடத்துக்கு முதலில் போய்ச் சேருவோம். இரவு இரண்டாம் ஜாமத்துக்குள் நான் என் வீட்டுக்குப் போய் எல்லாவற்றையும் நிச்சயமாய்த் தெரிந்து கொண்டு வருகிறேன்" என்றாள்.

"பெண்ணே! உன்னை யாராவது பார்த்து விட்டால், என்ன செய்கிறது? உனக்கு ஏதேனும் இச்சமயம் நேர்ந்து விட்டால், எங்கள் கதி அதோ கதிதான்!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! என் உயிரைப் பற்றி இத்தனை நாளும் நான் இலட்சியம் செய்ததில்லை. இன்றைக்குத்தான் கவலை பிறந்திருக்கிறது. இளவரசருக்கு அபாயம் நீங்கும் வரையில் என் உயிருக்கு ஒன்றும் வராது!" என்றாள் பூங்குழலி.

படகு கால்வாய்க்குள் மெள்ள மெள்ளச் சென்றது. சத்தம் சிறிதும் வெளியில் கேளாதபடி மிக மெதுவாகப் பூங்குழலி துடுப்பு வலித்தாள்.

கால்வாயின் இருபுறமும் இருள் சூழ்ந்திருந்தது. கரை ஓரமாக உயர்ந்து வளர்ந்திருந்த மரங்களின் கரிய நிழல்கள் கால்வாயில் விழுந்து அதன் கரிய நீரை மேலும் கரியதாக்கின.

வானத்திலிருந்து விண் மீன்கள் எட்டிப் பார்த்தன. வந்தியத் தேவனைப் போலவே நட்சத்திரங்களும் மிகுந்த கவலையுடன் அப்படகின் போக்கைக் கவனித்ததாகத் தோன்றியது.

நீரில் பிரதிபலித்த நட்சத்திரங்கள், கரையிலிருந்த மரங்கள் காற்றில் ஆடிய போது அவற்றின் நிழலும் ஆடியபடியால், அடிக்கடி சலனமடைந்து கொண்டிருந்தன. வந்தியத் தேவனுடைய உள்ளத்தின் சஞ்சலத்தை அவை சரியாகவே பிரதிபலித்தன.

ஒரு யுகம் போலத் தோன்றிய ஒரு நாழிகை நேரம், படகு கால்வாயில் சென்ற பிறகு பூங்குழலி படகைக் கரையோரமாக நிறுத்தினாள்.

* * *

பூங்குழலி கால்வாயின் கரைமீதேறிக் காட்டு வழியில் புகுந்து சென்றாள். அதாவது அவளுடைய உடம்பு சென்று கொண்டிருந்தது. அவளுடைய உயிர் கால்வாயில் விட்டிருந்த படகிலேயே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அந்த முன்னிருட்டு நேரத்தில் முட்செடிகள், மேடு பள்ளங்கள், காட்டு ஜந்துக்கள் ஒன்றையும் இலட்சியம் செய்யாமல் அதிவிரைவாக நடந்து சென்றாள். தடைகள் இல்லாத இடங்களில் ஓடவும் செய்தாள். நேரே கோடிக்கரைக் குழகர் கோயிலைக் குறி வைத்துக் கொண்டு போனாள். அவள் கோயில் வாயிலை அடைந்ததற்கும் குருக்கள் சுவாமி சந்நிதியின் கதவைப் பூட்டுவதற்கும் சரியாக இருந்தது.

அக்கம் பக்கம் பார்த்து வேறு யாரும் இல்லை என்று தெரிந்து கொண்டாள். கதவைப் பூட்டி விட்டுத் திரும்பிய குருக்கள் எதிரில் போய் நின்றாள்.

குருக்கள் அவளை அந்த நேரத்தில் பார்த்துச் சிறிது வியப்படைந்தார். அவளுடைய சுபாவத்தை நன்கு அறிந்தவராயிருந்தும்கூடக் கொஞ்சம் திடுக்கிட்டுத் திகைத்துப் போய்விட்டார்.

"நீயா, பூங்குழலி! வேறு யாரோ என்று பார்த்தேன். கோடிக்கரை முழுதும்தான் ஒரே அமர்க்களப் படுகிறதே! எங்கே, அம்மா, உன்னைக் கொஞ்ச நாளாகக் காணோம்? இவ்வளவு தடபுடலிலும் உன்னைப் பற்றித் தகவல் இல்லையே என்று இன்று சாயங்காலம் கூட யோசித்தேன்" என்றார்.

"வெளியூருக்குப் போயிருந்தேன், சுவாமி! ஏதோ அமர்க்களமாயிருக்கிறதே யென்றுதான் உங்களிடம் விசாரிக்கலாம் என்று வந்தேன். கடற்கரையெல்லாம் நிற்பவர்கள் யார்?" என்று பூங்குழலி கேட்டாள்.

"உனக்கு ஒன்றுமே தெரியாதா? வீட்டுப் பக்கம் போகவில்லையா?"

"வீட்டுப் பக்கம் போனேன். அங்கே யார் யாரோ கூட்டமாயிருக்கவே திரும்பி விட்டேன். புது மனிதர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது என்றுதான் உங்களுக்குத் தெரியுமே? வந்திருப்பவர்கள் யார்?"

"பெரிய பழுவேட்டரையர் வந்திருக்கிறார். அவருடைய இளையராணி வந்திருக்கிறாள். அவர்களுடைய பரிவாரங்கள் வந்திருக்கிறார்கள். இன்னும் காஞ்சிபுரத்துப் பார்த்திபேந்திர பல்லவனும்! அவனும் வந்திருக்கிறான். வெறுமனே வரவில்லை. பயங்கரமான செய்தியுடன் வந்திருக்கிறான். உனக்கு அது கூடத் தெரியாதா, பூங்குழலி?"

"அது என்ன பயங்கரமான செய்தி? எனக்கு ஒன்றுமே தெரியாதே!"

"அந்தப் பாவியினுடைய கப்பலில் இளவரசர் பொன்னியின் செல்வரும் வந்தாராம். வழியில் சுழற்காற்று அடித்ததாம். யாரையோ காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்து விட்டாராம். பிறகு அகப்படவேயில்லையாம்! ஒருவேளை இந்தக் கடற்கரையில் வந்து ஒதுங்குவாரோ என்று பார்ப்பதற்காகத்தான் பழுவேட்டரையரின் ஆட்கள் கோடிக்கரையெங்கும் அலைகிறார்கள். பழுவேட்டரையரும் அலைகிறார். ஏன், அவருடைய இளையராணி கூட அலைகிறாள். சற்று முன்னால் இங்கே கூட அந்த அம்மாள் வந்திருந்தாள். பூங்குழலி! பழுவூர் இளைய ராணியைப் பற்றி ஜனங்கள் என்ன வெல்லாமோ பேசிக் கொள்கிறார்களே, அதெல்லாம் சுத்தத் தவறு! நம் இளவரசருக்கு நேர்ந்த கதியைக் குறித்து அந்த அம்மாள் எப்படித் துடி துடிக்கிறாள் தெரியுமா?"

"அப்படியா, குருக்களையா? பழுவூர் ராணியின் நல்ல குணத்தைப் பற்றித் தாங்கள் சொல்வது எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. ஆனால் இங்கே எதற்காக அந்த ராணி வந்தாளாம்?"

"இளவரசர் எப்படியாவது உயிரோடு அகப்பட வேண்டும் என்று குழகரைப் பிரார்த்தித்துக் கொள்வதற்காக வந்தாளாம். உன்னைப் போல் எல்லாரும் கல்நெஞ்சு படைத்தவர்களாயிருப்பார்களா? இளவரசரைப் பற்றிய பயங்கரச் செய்தி கேட்டுக் கூட நீ துளிக்கூடக் கலங்கவில்லையே?"

"நாம் கலங்கி என்ன பயன், சுவாமி? எல்லாம் விதியின்படி நடக்கும் என்று நீங்களே எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறீர்களே! அது போனால் போகட்டும். அவ்வளவு பெரிய மனிதர்கள் வந்திருக்கும்போது நான் என் வீட்டுக்குப் போக விரும்பவில்லை. கையிலே

வைத்திருக்கும் பிரஸாதத்தை என்னிடம் கொடுத்துவிட்டுப் போங்கள். நான் இங்கேயே சாப்பிட்டு விட்டுக் கோவிலிலேயே இருந்துவிடுகிறேன்.''

''நீ ஒரு தனிப் பிறவிதான், பூங்குழலி! பெரிய மனிதர்கள் வந்தால் எல்லாரும் அவர்களைப் போய்ப் பார்க்கவும் பழக்கம் செய்து கொள்ளவும் விரும்புவார்கள். உனக்கு வேற்று மனிதர்களையே பிடிப்பதில்லை. அதிலும் பெரிய மனிதர்கள் என்றால் ஒரே பயம். பெரிய மனிதர்கள் என்றால் உன்னைக் கடித்து விழுங்கிவிடுவார்களா? எதற்காக இந்தக் காட்டில் தனியே இருக்க வேண்டும்?''

''குருக்களையா! பிரஸாதத்தைக் கொடுக்க உங்களுக்கு இஷ்டமில்லாவிடில் வேண்டாம். என்னை வீணில் திட்டாதீர்கள்!''

''சிவ சிவா! உன்னை ஏன் நான் திட்டுகிறேன்? இந்தப் பிரஸாதம் உன் பசிக்குப் போதாதே என்று பார்த்தேன். தாராளமாய் வாங்கிக்கொள்!'' என்று அர்ச்சகர் துணியில் கட்டி வைத்திருந்த சுவாமிப் பிரஸாதத்தைக் கொடுத்தார்.

மூட்டையை வாங்கிப் பூங்குழலி பிரித்துப் பார்த்துவிட்டு ''என் பசிக்கு இது போதாதுதான்! அவ்வளவு பெரிய சுவாமிக்கு இவ்வளவு குறைவாக நைவேத்தியம் வைக்கிறீர்களே! இது நியாயமா, சுவாமி! போனால் போகட்டும்! அந்தக் கெண்டியில் என்ன இருக்கிறது? குடிக்கிற ஜலமா?''

''இல்லை, சுவாமிக்கு அபிஷேகம் செய்த பால்! குழந்தைக்காக எடுத்துக் கொண்டு போகிறேன்.''

''இன்றைக்கு நானே உங்கள் குழந்தையாயிருக்கிறேன். அதையும் கொடுத்து விட்டுப் போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு.''

''நல்ல பெண் அம்மா, நீ! போகட்டும் கெண்டியையாவது பத்திரமாய் வைத்திரு!''

இவ்விதம் சொல்லிக் குருக்கள் கெண்டியையும் பூங்குழலியிடம் கொடுத்தார்.

அச்சமயம் தூரத்தில் எங்கிருந்தோ ஆந்தையின் குரல் கேட்டது.

பூங்குழலி சிறிது திகைத்து ''ஐயா! அது என்ன சத்தம்?'' என்று கேட்டாள்.

''தெரியவில்லையா, அம்மா! கோட்டான் கூவுகிறது. இந்தக் கோடிக்கரைக் காட்டில் கோட்டானுக்கா பஞ்சம்!'' என்று சொன்னார் குருக்கள்.

மறுபடியும் அந்தக் குரல் கேட்டது.

''ஆமாம்; கோட்டான் குரல் மாதிரிதான் இருக்கிறது!'' என்றாள் பூங்குழலி.

''உன்னை ஒரு கோட்டானும் ஒன்றும் செய்யாது. கோயில் பிரகாரக் கதவைத் தாளிட்டுக் கொண்டு படுத்துக் கொள் அம்மா!'' என்று சொல்லி விட்டுக் குருக்கள் நடையைக் கட்டினார்.

குருக்கள் மறைந்ததும் பூங்குழலியும் புறப்பட்டாள். பிரஸாதத்தை மடியில் கட்டிக் கொண்டு, கெண்டியைக் கையில் எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

கோட்டானின் குரல்கேட்ட திசையை நோக்கிச் சென்றாள். கொஞ்ச தூரம் போனதும் ஒரு குறுகிய வாய்க்கால் குறுக்கிட்டது. அதன் இரு புறமும் தாழம்பூப் புதர்கள் காடாக மண்டி வளர்ந்திருந்தன.

அந்த வாய்க்காலின் கரையைப் பிடித்துக் கொண்டே பூங்குழலி நடந்தாள். தாழம்பூச் செடிகளின் முட்கள் சில சமயம் அவளைக் குத்தின. அதை அவள் பொருட்படுத்தவில்லை.

தாழம்பூக்கள் வெடித்து மலர்ந்து நறுமணத்தைப் பரப்பின. அந்த மணம் மற்றவர்களைப் போதை கொள்ளச் செய்திருக்கும். ஆனால் பூங்குழலிக்கு அந்த ஞாபகம்கூட வரவில்லை.

கரையோடு காலடிச் சத்தம் கேளாதபடி மெள்ள மெள்ள நடந்து போனாள். அவள் செவிகள் வெகு கவனமாக உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தன. காட்டுப் பிரதேசத்தில் இரவில் எத்தனையோ விதவிதமான சத்தங்கள் கேட்கும் அல்லவா? அவை யெல்லாம் அவளுடைய கவனத்தைக் கவரவில்லை.

பின்னர், அவள் என்ன சத்தத்தைத்தான் எதிர்பார்த்தாள்!—இதோ!......

இருவர் மெல்லிய குரலில் பேசும் சத்தம் கேட்டது.

ஒன்று ஆண் குரல்; இன்னொன்று பெண்ணின் குரல்.

பூங்குழலி நன்றாக மறைந்து நின்று கொண்டாள். அவர்கள் பேசுவது இன்னதென்பதைக் கவனமாக உற்றுக் காது கொடுத்துக் கேட்டாள்.

''மந்திரவாதி! இளவரசர் கடலில் விழுந்து இறந்துவிட்டதாகத்தான் உன்னைப்போல் எல்லாரும் நம்புகிறார்கள். பழுவேட்டரையரும் உருகி மாய்கிறார். ஆனால் நான் நம்பவில்லை!'' என்று அந்தப் பெண் குரல் கூறியது. (தொடரும்)

எதிர் பாருங்கள்!

# தாய் உள்ளம்



அன்பிற் சிறந்தது தாய் உள்ளம்

# தாய் உள்ளம்



படத்தில் உயர்ந்தது தாய் உள்ளம்

டைரக்ஷன்....ராம்நாத்

நாராயணன் கம்பெனி தயாரிப்பு.... ஸ்டூடியோ...வாஹினி

# இலங்கை இந்தியர் திருப்தி

ரஜனி

—கொழும்பு, ஜனவரி 24ட

இந்திய மத்திய பார்லிமெண்டிலும் சென்னை அசெம்பிளியிலும் இலங்கை இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைத்திருப்பது பலவிதமான இன்னல்களுக்கு உட்பட்டிருக்கும் இலங்கை இந்திய மக்களுக்கு ஓரளவு திருப்தியையும் நம்பிக்கையையும் கொடுத்திருக்கின்றது. திருநெல்வேலி தொகுதியிலிருந்து மத்திய பார்லிமெண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ பி. தாணுப் பிள்ளை இலங்கை இந்தியர்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றவர். இலங்கை இந்திய காங்கிரஸின் மூலகர்த்தாக்களில் ஒருவர். அந்த ஸ்தாபனத்தின் மூலமாகக் காங்கிரஸின் ஆரம்ப நாட்களில் தோட்டத் தொழிலாள மக்களுக்கு அவர் செய்த சேவைகள் அனந்தம். காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் பண்டித நேரு 1939-ம் வருடம் அங்குரார்ப்பணம் செய்து கொடுப்பதற்கு முன்னால் இந்திய மக்கள் அனைவருடைய நம்பிக்கையையும் பெற்ற இந்திய சேவா சங்கமென்ற ஒரு சக்தியிருந்த ஸ்தாபனம் இங்கிருந்தது. அதற்கு ஸ்ரீ தாணுப் பிள்ளை ஒரு தூண்போலிருந்து தொண்டாற்றினார். காங்கிரஸ் ஸ்தாபனத்திடம் தோட்டத் தொழிலாளருக்குப் பக்தியும் விசுவாசமும் நம்பிக்கையும் ஏற்படச் செய்த ஒரு சில தலைவர்களில் ஸ்ரீ தாணுப் பிள்ளையும் ஒருவர்.

காங்கிரஸ் அக்கிராசனர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் திருநெல்வேலிக்குச் சென்று ஐந்து தினங்கள் வரை நெல்லை ஜில்லாவின் பல பகுதிகளிலும் பல பிரசங்கங்கள் செய்தார். ஆதரவற்றிருக்கும் இலங்கை இந்தியச் சகோதரர்களின் துன்பங்களை மத்திய பார்லிமெண்டில் அவ்வப்பொழுது எடுத்துரைப்பதற்கேனும் ஸ்ரீ தாணுப் பிள்ளையைத் தெரிவு செய்ய வேண்டுமென்று வாக்காளர்களிடம் உருக்கமாக மன்றாடினார். அவருடைய வேண்டுகோள் வீண் போகவில்லை. ஸ்ரீ தாணுப் பிள்ளை இந்தியாவுக்குப் புதியவரென்றாலும் அதிகப் பணவசதியும் செல்வாக்குமுள்ள தமது போட்டி அபேட்சகர்களை யெல்லாம் தோற்கடித்து, சுமார் 25,000 ஓட்டு மெஜாரிட்டியுடன் வெற்றிபெற்றார். ஸ்ரீ எஸ். தொண்டமான் எம். பி. வர்ணிப்பதைப்போல இந்த வெற்றி ஸ்ரீ தாணுப் பிள்ளையின் வெற்றி மாத்திரமல்ல; இலங்கை இந்திய காங்கிரசின் வெற்றி.

நாங்குனேரி தொகுதியில் சென்னை ராஜ்ய அசெம்பிளிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் ஸ்ரீ சங்கரும் இலங்கையுடன் நெருங்கிய தொடர்புடையவர். இலங்கை இந்திய காங்கிரஸின் கொழும்பு ஜில்லாக் கமிட்டியில் அவர் அங்கத்தினராயிருந்து சமூக சேவை செய்தவர். இலங்கையிலுள்ள செட்டியார் சமூகத்துக்குத் தலைவரைப் போல விளங்கியவர். சுய முயற்சியும் சாதுர்யமும் மதி நுட்பமும் இருந்தால் வாழ்க்கைத் துறையில் முன்னேற ஏழ்மை ஒரு முட்டுக்கட்டையாயிராதென்பதை நிரூபணம் செய்து காட்டியவர். இந்திய அரசியலுக்கு இவரும் புதியவர்தான். என்றாலும் நாங்குனேரியில் மக்களின் அத்யாவசியத் தேவையாயிருந்த ஒரு ஹைஸ்கூலை ஸ்தாபிப்பதற்கு உதவி, வேறு பல நல்ல தர்ம காரியங்களும் செய்ததால் பொது ஜனங்களின் அபிமானத்தை அவர் அடைய முடிந்தது.

## தமிழிலேயே நடவடிக்கை

புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட யாழ்ப்பாணம் முனிசிபல் சபை, புதிய மேயர் ஸ்ரீ ஸாம் ஏ. சபாபதியின் தலைமையில் முதன் முறையாக இவ்வாரம் கூடியபொழுது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது. முனிசிபல் நிர்வாகம் அனைத்தும் இனித் தமிழிலேயே நடைபெற வேண்டுமென ஒரு அங்கத்தினர் பிரேரேபித்தார். எத்தனையோ ஆண்டுகளாக ஆங்கிலத்தில் நடந்து வரும் நிர்வாகத்தை திடு திப்பென்று தமிழில் மாற்றுவது சாத்தியமா! விரும்பத் தக்கதுதானா! இதைப்பற்றி நீண்ட நேரம் வரை விவாதம் நடந்தது. நிலைமை சிக்கலடையாமலிருக்கவும் இலட்சியம் சுலபமாக நிறைவேறவும் இன்னொரு அங்கத்தினர் ஒரு திருத்தத்தைப் பிரரேபித்தார். நகர நிர்வாகம் அனைத்தும் கூடிய சீக்கிரத்தில் தமிழில் மாறவேண்டும். இதற்குப் பூர்வாங்கமாக முனிசிபல் சபை கூட்ட நடவடிக்கைகளை உடனடியாகத் தமிழில் நடத்த வேண்டும் என்பதுதான் இந்தத் திருத்தம். சபை இத் திருத்தத்தை ஒப்புக் கொண்டு விட்டபடியினால் இனி யாழ்ப்பாணம் முனிசிபல் சபைக் கூட்டம் தமிழிலேயே நடக்கும். சிங்களவர்கள் மிகுதியாயுள்ள இடங்களிலிருக்கும் ஸ்தல ஸ்தாபனங்களிலெல்லாம் சிங்களத்தில்தான் விவாதம் நடைபெறுகின்றது. அந்த நிலைமையில் முற்றிலும் தமிழர்களையே அங்கத்தினர்களாகக் கொண்ட யாழ்ப்பாணம் முனிசிபல் சபை இனித் தமிழிலேயே விவாதங்கள் நடத்துவதென்று இப்பொழுதேனும் தீர்மானித்ததற்கு அந்தச் சபையைப் பாராட்ட வேண்டும்.

## கட்டாய வாக்களிப்பு

பொது ஜனங்களுக்கு அரசியல் பொறுப்புணர்ச்சி அதிகம் ஏற்படவும் பொதுத் தேர்தல்களில் லஞ்சம் முதலான ஊழல்கள் குறையவும் மானிப்பாய் தலைவர் ஸ்ரீ வி. தியாகராஜா ஒரு அருமையான யோசனை சொல்லியிருக்கிறார். யாழ்ப்பாணம் ஜில்லா சமூக ஸ்தாபனங்கள் யூனியனின் வருடாந்திர மகாநாட்டில் அவர் பேசியபொழுது தங்களது கடமைகளை உணர்ந்த பொது மக்களே நாட்டுக்குத் தேவை யென்றும், அவர்களது பொறுப்பு உணர்ச்சியை அதிகரிக்கப் பொதுத் தேர்தல்களில் ஓட்டளிப்பதைச் சட்டத்தின் மூலம் கட்டாயமாக்க வேண்டு மென்றும் நியாயமான காரணமில்லாமல் ஓட்டுக் கொடுக்கத் தவறுகின்றவர்களைத் தண்டனைக்கு உட்படுத்த வேண்டு மென்றும் அவர் கூறினார். கட்டாய ஓட்டளிப்பு முறை, தேச நிர்வாகத்தில் பொது ஜனங்களுக்கு அக்கறை ஏற்படச் செய்வதோடு தேர்தல்களின் பொழுது ஏற்படும் லஞ்ச ஊழல்களைப் போக்கவும் வெகுவாக உதவி புரியுமென்று அவர் சொன்னார்.



# உறுதியான தேகதிடம்

## நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்



ஆரோக்யமளிக்கும் தன்மை நிரூபணமான இந்த டானிக்கைச் சாப்பிட்டுப் பாருங்கள். போஜனம் பூர்த்தியாவது மிகுதி போஷாக்கும் பெறுவீர். உங்கள் தினசரி வேலைகளையும் தேகப்பியாசங்களையும் சரிவரச் செய்யப் புதிய சக்தியும் உறுதியான தேகதிடமும் பெறுக. களைப்பே தோன்றாது உங்கள் உறுப்புகள் வேலை செய்ய அவசியமான போஷாக்கு கிடைக்கும்.

வளரும் குழந்தைகளுக்கு ருசி மிகுந்த வாட்டர் பரீஸ் காம்பவுண்ட் மிகவும் உதவிகரமானது. இருமல், சளி ஏற்படாதவாறு எதிர்ப்பு சக்தி உண்டாக்கும்.

# WATERBURY'S
## COMPOUND

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் திடத்துடன் வைத்திருக்கும்




NAS 743

# பஜ கோவிந்தம்



**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

**ப**க்தர்கள் கடவுளை எந்த உருவம் எந்தப் பெயர்வைத்துத் தியானித்து பக்தி செய்தாலும் ஒன்றே. சம்பிரதாய வேறுபாட்டினால் கெடுதல் ஒன்றுமில்லை. வழக்கப்பட்டு வந்த முறையில் பக்தி செய்தால் பக்தர்களுடைய உள்ளம் கரையும். உள்ளம் கரைவதுதான் முக்கியம், அதுவே பயன் தரும். உள்ளம் கரையாமற் போனால் எவ்வளவு நேரம் எந்த முறையில் பூஜை செய்தாலும் பயனில்லை. சிவன், திருமால் என்கிற வேறுபாடானது பெயர் மட்டிலுமே. அன்பும் உறுதியான பக்தியும் சிலரைத் திருமால் சிவனுக்கு அடிமை என்றும், சிலரைச் சிவன் திருமாலுக்கு அடிமை என்றும் பாடச் செய்யும். அது அன்பின் வேகமேயொழியச் சிவனையாவது திருமாலையாவது பாதிக்காது. பரம்பரையாக வந்த நாமங்கள் அனைத்தும் ஒரு ஈசனுக்கு வைத்த பல பேர்கள். இதனால் நாம் குழப்பமடைய வேண்டியதில்லை. வாதவூரடிகள் திருவாசகம் பாடியதும் நம்மாழ்வார் திருவாய்மொழி பாடியதும் சங்கரர் பஜகோவிந்தம் பாடியதும் அனைத்தும் கடந்த ஒரு பரமேசுவரனை நினைத்தே. கடவுள் என்பது பரம் பொருளின் தமிழ்ப் பெயர். பெயர் வேறுபாடுகள் மாத்திரமல்ல. பக்தியோடு மனதில் கற்பனை செய்து கொள்ளும் ரூபங்களின் வேறுபாடுகளும் அத்தகையனவே. ஒன்றுக்கே பல வடிவங்கள். எந்த நாமம் எந்த உருவம் பக்தனுக்கு ஆனந்தம் தருகிறதோ அதை வைத்து வழிபடுகிறான்.

**ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்**
**திருநாமம்பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ**

என்று பாடினார் மாணிக்கவாசகப் பெருமான்.

**"என்னுடையாரமுது எங்கள் அப்பன்**
**எம்பெருமான் இமவான் மகட்குத்**
**தன்னுடைக்கேள்வன் மகன் தகப்பன்**
**தமையன் எம்ஐயன் தாள்கள்பாடி"**

இதுவும் திருவாசகம். உமைக்கு நாயகன் ஈசன். அவனே அவளுக்கு மகன் என்றும் தகப்பன் என்றும் தமையன் என்றும் இந்தப் பாட்டில் சொல்லப்படுகிறது! ஆனபடியால் திருமால்தான் சர்வேசுவரன் என்று சிலரும், சிவனே சர்வேசுவரன் என்று வேறு பக்தர்கள் பாடுவதும் அவர்களுடைய பக்தி உரிமை. இது நம்மைக் குழப்பப் படுத்த வேண்டியதில்லை. நாமும் அவ்வாறே நமக்கு எது பிடிக்கிறதோ அதை வைத்துக் கொண்டு பக்தி செய்யலாம்.

**கொள்ளேன் புரந்தரன் மால் அயன்**
**வாழ்வு குடி கெடினும்**
**நள்ளேன் நினது அடியா ரொடல்**
**லால் நரகம் புகினும்,**

என்றெல்லாம் பாடுவதின் பொருளென்ன? தான் மனத்தில் வைத்த உருவத்தைத் தவிர்த்துப் பிற தெய்வங்களைக் குறைத்துப் பேசுவது சமயச் சண்டைக்காக அல்ல. உள்ளத்தில் ஊறும் பக்தியை ஒரு வழியில் செலுத்தி அதன் வேகத்தைப் பெருக்குவதற்கு இது ஒரு வழியாகும். பிற தெய்வங்களைத் தாழ்த்திக் கூறுவதின் நோக்கம் இதுவேயன்றி பேத எண்ணம் அல்லது அறியாமை அல்ல. "ஆயன் நான் மறையவன் நீயே ஆதல் அறிந்து" என்று மாணிக்கவாசகர் சொன்னதின் பொருள் என்ன? சங்கரர் "த்யேயம் ஸ்ரீபதிரூபம் அஜஸ்ரம்" என்று பாடினதும் "ஓயாதே உள்குவாம் மாது இருக்கும் பாதியனை" என்று மாணிக்கவாசகர் பாடினதும் மொழிக்கு மொழி ஒரே பொருள். ஒன்று திருமால் உருவத்தைத் தியானித்துச் சொன்னது. மற்றொன்று பரமசிவனைத் துதித்துப் பாடியது. பரம்பொருள் எந்த உருவத்திலும் ஒன்றே.

**20**

**சிறு அளவேனும் பகவத்கீதை ஓதி**
**ஒருதுளியேனும் கங்கைநீர் அருந்தி**
**ஒருகணமேனும் எப்போதேனும்**
**திருமால் வழிபட்டிருந்தாயேல் [னன்டை**
**ஒருபேச்சில்லை வாதமுமில்லை யமனுக்குன்**

பகவத்கீதா கிஞ்சித் அத்யிதா
கங்கா ஜலலவ கணிகா பீதா
ஸக்ருதபி யேனமுராரி ஸமர்ச்சா
க்ரியதே தஸ்ய யமேன நசர்ச்சா

முராரி அல்லது கோவிந்தனை ஒரு தடவையாவது பக்தியுடன் வழிபடுவாய் மீள்வாய் என்கிறார்.

பக்தி, அறிவு, நோன்பு எல்லாம் இந்தப் பாட்டில் ஒன்றாகக் கலந்து ஞானத்தின் கரையைக் கண்ட ஆச்சாரியர் பாடி விட்டார். "கிஞ்சித் அத்யிதா" 'கொஞ்சமேனும் படி அது போதும்' என்கிறார். கங்கை நீர் 'ஒரு துளி' குடி என்கிறார். கங்கை முழுதையும் குடிக்க வேண்டுமா அல்லது குடிக்க முடியுமா? இல்லை. 'எப்போதேனும் கோவிந்தனை நினை போதும், பின், மரணத்தை எண்ணிப் பயப்பட வேண்டியதில்லை' என்கிறார். இறையவன் "அடியார்க்கு எளியான்", "குற்றங் களைந்து குணங் கொண்டு கோதாட்டுபவன்", "பணிவார் பிணி தீர்ப்பான்", "இன்னிசை வீணையின் இசை போன்றவன்" என்றெல்லாம் அறிவு முதிர்ந்த தென்னாட்டுப் பக்தர்களும் பாடியிருக்கிறார்களல்லவா?

பொறுப்பது கஷ்டம் அருள்வாய் முராரீ!
பிறப்பது மிறப்பதும் மறுபடி பிறப்பதுமாய்
கரைகாணேன் இந்தப் பிறவிக் கடலுக்கு
சரணம் சரணம் காப்பாயென்னைக் காப்பாய்

புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீ ஜடரே சயனம்
இஹ ஸம்ஸாரே பஹுதுஸ்தாரே
க்ருபயாபாரே பாஹி முராரே

என்று அடுத்த பாட்டில் பாடுகிறார். இறைஞ்சினால் அவன் காப்பான், பிறவிக் கடலைக் கடத்துவான். ஐயமில்லை. அவன் அருளுக்கு வரம்பில்லை, அவன் அருளின்றி வேறு காப்புமில்லை, என்று ஞானமூர்த்தி சங்கரரே அழுதால் கொஞ்சம் படித்துவிட்டு மிக ஆடும் நம்மைப் போன்ற மூடர்களுக்கு என்ன பேச்சு இருக்கிறது?

---

भगवद्गीता किञ्चिदधीता
गङ्गाजललवकणिका पीता ।
सकृदपि येन मुरारि समर्चा
क्रियते तस्य यमेन न चर्चा ॥

पुनरपि जननम् पुनरपि मरणम्
पुनरपि जननीजठरे शयनम्
इह संसारे बहुदुस्तारे
कृपयापारे पाहि मुरारे ॥

---




மொழிபெயர்ப்பு : வாஞ்சி

“நமது போராட்டம் இன்னும் முடிய வில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை எதிர்த்து நாம் நடத்திய போராட்டம் முடிவடைந்து விட்டது என்பது உண்மைதான். எனினும் உண்மை யான சுதந்திரத்துக்கு இடையூறாக நிற்கும் நம் தேசத்தினரையே இப்போது நாம் எதிர்த்துப் போராட வேண்டி யிருக்கிறது.

“இத் தேசத்தில் உள்ள ஒவ்வொரு ஆடவரும் பெண்மணியும் வறுமை, பட்டினி, அறியாமை, வேலையில்லாத் திண்டாட்டம், முதலாளிகளின் கொடுமை, ஆட்சி வர்க்கத்தின் ஆணவம் இவற்றி லிருந்து விடுதலை பெற வேண்டும்.

“அவ்வாறு விடுதலை பெறும் வரையில் நமது போராட்டம் நிற்காது.

“வெள்ளையர்கள் ஆட்சி புரிந்த இடத்தில் கருப்பு நிறத்தவர் ஆட்சி புரிவது மாத்திரம் சுதந்திரம் ஆகிவிடாது......”

சோஷலிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீமதி ஆஷ்ராவின் இந்த ஆவேசப் பேச்சைக் கேட்டு அங்கு கூடியிருந்த ஜனக்கூட்டம் செய்த கர கோஷம் வானத்தைப் பிளந்துகொண்டு சென்றது.

பிரசங்கத்தை முடித்துக்கொண்டு ஆஷ்ரா மேடையில் உட்கார்ந்தபோது, அவள் நெற்றியில் முத்து முத்தாக வியர்வை துளித்தது.

ஆஷ்ரா சிறையிலிருந்து விடுதலை அடைந்து ஒரு வாரம் கூட ஆகவில்லை. அவளைப் பாராட்டுவதற் காகவே மேற்படி கூட்டம் கூட்டப்பட்டது.

ஆஷ்ரா பிரசங்கத்தை முடித்துச் சில நிமி ஷங்கள் கூட ஆகி யிராது; ஒரு தொண்டர் தந்தி ஒன்றை அவளிடம் கொண்டு வந்து கொடுத்தார்.

அதில் “ஆஸாதின் நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது. உடனே புறப்பட்டு வா-கலீமான்” என்று இருந்தது.

அந்தத் தந்தியைப் பார்த்ததுதான் தாமதம்; ஆஷ்ராவின் முகத்தில் தென்பட்ட ஆவேச உணர்ச்சி அடியோடு மறைந்தது; கவலையும் கலக்கமும் வேதனையும் தாண்டவமாடின.

* * *

ஆஷ்ரா ரயில் வண்டியில் போய்க் கொண் டிருந்தபோது வெளியே எங்கும் இருள் மயமாக இருந்தது. மேகங்களுக்கு இடையே அங்கொரு நட்சத்திரமும் இங்கொரு நட்சத்திரமுமாகத் தோன்றிக் கொண்டிருந்தன.

அவற்றைப் போல இருபுறத்திலும் இருந்த மரங்களிடையிலும் அங்கொரு மின்மினிப் பூச்சி யும் இங்கொரு மின்மினிப் பூச்சியும் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

எல்லைப்புற மெயில் இருளைக் கிழித் துக்கொண்டு வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தது.

அந்த மெயில் வண்டியில் மூன்றும் வகுப்பில் உட்கார்ந்திருந்த ஆஷ்ரா அரைத் தூக்கத்தில் பல்வேறு வித மாக உட்கார்ந்து கொண்டும் சாய்ந்து கொண்டும் இருந்தபிரயாணிகளையோ, வெளியே சூழ்ந்துள்ள இருளையோ, மெயிலின் வேகத்தையோ எதையும் கவனித்ததாகத் தெரியவில்லை.

அவள் முகம் கவலை தோய்ந்திருந் தது. பாதி மூடி யிருந்த ஆஷ்ரா வின் கண்கள் மிகவும் கலங்கி யிருந்தன.

அவள் வாழ்க்கையில் நிகழ்ந்த பல சம்பவங்கள் நிழல் படங்களைப் போல் அவளுடைய கண் முன் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

தன் குழந்தை ஆஸாதுடனும், கணவன் கலீமா னுடனும் ஆஷ்ரா கழித்த இன்ப நாட்களை அவள் நினைத்துக் கொண்டாள். அப்போது நிகழ்ந்த இன்பகரமான சில குடும்ப சம்பவங்கள் அவள் ஞாபகத்துக்கு வந்தன.

பிறகு சிறையிலே மாதக் கணக்கில் அவள் கழித்த நாட்களை எண்ணினாள்.

ஆனந்தமான குடும்ப வாழ்க்கைக்கும் துன்ப மயமான சிறை வாழ்க்கைக்கும் எவ்வளவு வேற் றுமை ! ஆஷ்ரா சிறையில் கழித்த ஆறு மாதமும் ஆறு யுகங்களாக அவளுக்குத் தோன்றின.

அங்கு உணவு படுமோசமாக இருக்கும். அதைப் பற்றி அதிகாரிகளிடம் புகார் செய்தால், அந்த உணவைச் சாப்பிடும் தண்டனை போதாது என்று மேற்கொண்டு ஏதாவது தண்டனை விதிப்பார்கள்!

எனவே, சிறையிலிருந்து விடுதலை பெற்றது ஆஷ்ராவுக்கு நரகத்திலிருந்து விடுதலை பெற்றது போல் தோன்றியது.

சிறையிலிருந்து வெளி வந்த பிறகு ஆஷ்ரா தன் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வருமுன், அவள் குழந்தையைப் பற்றி மேலே கூறிய விதம் தந்தி வந்து விட்டது.

தன் கணவனையோ, குழந்தையையோ இனி சந் திக்கப் போவதில்லை; தன் வாழ்க்கையை இனி சமூகத் தொண்டில் அர்ப்பணம் செய்வது என்ற ஆஷ்ராவின் பிடிவாதமெல்லாம் மேற்படி தந்தி யைக் கண்டதும் தவிடு பொடியாகி விட்டன.

* * *

பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் ஆஷ்ரா தான் காதலித்த கலீமானை மணந்து கொண்ட போது தான் சொர்க்க லோகத்தில் நடமாடுவதாக நினைத்துக் கொண்டிருந்தாள்.

அவர்களுடைய தாம்பத்ய வாழ்க்கையில் இன்ப மும் துன்பமும் கலந்திருந்தாலும் அதை யெல் லாம் அவள் பொருட்படுத்தவில்லை.

அவளுக்கும் கலீமானுக்கும் அடிக்கடி சச்சரவு ஏற்படுவது உண்டு. எனினும் மேற்படி சச்சரவு அதிகநேரம் நீடித்திராது; விரைவில் சமாதானம் ஏற்பட்டு விடும்.

ஆனந்த மயமான ஆஷ்ராவின் இல்லற வாழ்க் கையின் சின்னமாக ஆஸாத் பிறந்த போது, கலீ மான் தம்பதிகளின் மகிழ்ச்சி எல்லை கடந்து விட்டது. அப்போது ஆஷ்ராவுக்குத் தன் கனவு,

தன் வாழ்க்கையின் இலட்சியம் எல்லாம் பூர்த்தியாகி விட்டதுபோல் தோன்றியது.

இச்சந்தர்ப்பத்தில்தான் அவர்களுடைய சந்தோஷத்தை நீடிக்க விடாமல் விதி சதி செய்யத் தொடங்கியது. ஏராளமாகச் சம்பாதித்துக் கொண்டிருந்த சுலைமானின் தந்தை காலமானார். எனவே சுலைமானுக்குத் தன் குடும்பத்தை மாத்திரம் அல்ல, தன் தந்தை பராமரித்து வந்த சில உறவினரின் குடும்பங்களையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு ஏற்பட்டது.

குறைந்த சம்பளம் உள்ள சுலைமானுக்குத் திடீரென்று தன் தலையில் சுமந்த பொறுப்பைச் சமாளிப்பது மிகவும் கஷ்டமாக இருந்தது.

சுலைமானுக்குக் கஷ்டம் ஏற்படக்கூடாது என்பதற்காக ஆஷ்ரா தன் தேவைகளையெல்லாம் குறைத்துக் கொண்டாள். ஆனால் ஆஸாதைச் செல்வமாக வளர்க்கும் விஷயமாக ஏற்பட்ட செலவைக் குறைக்க அவள் இஷ்டப்படவில்லை.

ஆஸாதின் சௌகரியத்துக்குச் சிறிதளவு தடை ஏற்பட்டாலும் அவள் சுலைமானைக் கடிந்து கொள்வாள்.

"குழந்தைக்கு இந்த மாதம் அவசியம் கம்பளி உடைகள் வாங்கித் தருவதாகச் சொன்னீர்களே! எங்கே அவை!" என்றாள் ஆஷ்ரா.

"நான்தான் என் சம்பளத்தை யெல்லாம் உன் கையில் கொடுத்து விடுகிறேனே! எனக்கு ஏதாவது சில்லறை தேவையாக இருந்தால்கூட உன்னைக் கேட்டுத்தான் வாங்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது!" என்று வேதனை தோய்ந்த குரலில் மெதுவாகக் கூறினான் சுலைமான்.

"பிரமாத சம்பளம்! நீங்கள் கொடுக்கும் அற்பத் தொகை குடும்பச் செலவுக்கே போதுமானதாக இல்லை. நம் குழந்தையோ குளிரால் வாடுகிறான். நல்ல உடைக்குக் கூட வழியில்லை" என்று வெறுப்புடன் சொன்னாள் ஆஷ்ரா.

"நான் என்ன செய்வேன், ஆஷ்ரா! உனக்காகவும் அருமை ஆஸாதுக்காகவும் இரவு பகலாக உழைத்து என் உயிரையும் கொடுக்க நான் சித்தமாயிருக்கிறேன். ஆனால் இந்தியாவில் என்னைப் போன்ற எழுத்தாளனின் வாழ்க்கை எந்தக் காலத்தில்தான் அபிவிருத்தி அடையப் போகிறதோ!" என்றான் சுலைமான் சலிப்புடன்.

அதைக் கேட்டதும் சுலைமானிடம் ஆஷ்ராவுக்கு இரக்கம் உண்டாயிற்று.

"குழந்தை கஷ்டப்படுகிறானே என்பதற்காகச் சொன்னேன். உங்கள் கஷ்டம் எனக்கு இல்லையா!" என்று இனிய குரலில் கூறி ஆஷ்ரா சுலைமானைச் சமாதானப் படுத்தினாள்.

சுலைமான் பத்திரிகாலயத்திலிருந்து மிகவும் களைத்துப் போய் வீட்டுக்கு வரும்போது ஆஷ்ராவும் ஆஸாதும் புன் முறுவலுடன் அவனை வரவேற்பார்கள். அதைக் கண்டதும் சுலைமானுக்கு இருந்த களைப்பெல்லாம் பறந்தோடிவிடும்.

அப்போதெல்லாம் ஆஷ்ரா, குடும்பம்தான் பெண்களின் உலகம் என்று நினைத்துக் கொண்டிருந்தாள். கணவனின் சுக துக்கங்களில் பங்கெடுத்துக் கொள்வதையும் குழந்தையைப் பராமரிப்பதையும் தவிர, தான் செய்ய வேண்டிய கடமைகள் வேறு எதுவும் இல்லை என்று எண்ணிக் கொண்டிருந்தாள்.

* * *

சிந்தனையில் ஆழ்ந்திருந்த ஆஷ்ராவின் மனக் கண்ணுக்கு அதன்பின் நிகழ்ந்த மற்றும் சில காட்சிகளும் தோன்றி மறைந்தன.

1942-ம் வருஷம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, பாரத நாடெங்கும் பலாத்கார இயக்கம் நடந்தபோது சுலைமானும் அதில் தீவிர பங்கு எடுத்துக் கொண்டான். ஆஷ்ராவும் ஆஸாதும் சுகமாக வாழ்க்கை நடத்த முடியாததற்கு அன்னிய ஆட்சிதான் காரணம் என்று அவனுக்குத் தோன்றியது.

அப்போது அதிகார வர்க்கத்தினால் சிறையில் அடைக்கப்பட்ட ஆயிரக் கணக்கானவர்களில் சுலைமானும் ஒருவன்.

சுலைமான் சிறைப்பட்டதைக் கண்டு ஆஷ்ரா மிகவும் அதிர்ச்சியடைந்தாள். அவளுக்குத் தன் எதிர்காலம் முழுதும் இருள் சூழ்ந்து விட்டது போல் தோன்றியது. அருமை ஆஸாதின் கதி என்ன ஆவது என்பதை நினைத்தபோது அவள் மனம் துடிதுடித்தது. கடைசியாக அவள் வேறு வழியின்றி, பம்பாயில் உள்ள தன் சகோதரனிடம் குழந்தையோடு அடைக்கலம் புகுந்தாள்.

ஆனால் அப்போது பம்பாயிலும் தேசிய இயக்கம் வெகு மும்முரமாக இருந்தது. ஆஷ்ராவின் சகோதரன் அதில் தீவிரமாக ஈடுபட்டிருந்தான். அவன் அடிக்கடி மேற்படி இயக்கத்தைக் குறித்துப் பெருமிதம் அடைந்ததுடன், இந்தியாவில் உள்ள ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் அதில் கலந்து கொள்ள வேண்டும் என்று இடைவிடாமல் பிரசாரம் செய்து வந்ததால், ஆஷ்ராவின் மனமும் மாறத் தொடங்கியது. சில வாரங்கள் கழிந்த பின் ஆஷ்ராவும் அந்த இயக்கத்தில் தீவிரமாகக் கலந்து கொண்டாள்.

அவளும் அவளுடைய சகோதரனும் மற்றும் பலரும் தலை மறைவாக இருந்து வேலை செய்ததால், அதிர்ஷ்டவசமாக அவர்கள் தண்டனையடைந்து சிறைப்படவில்லை. எனினும் அக்காலங்களில் போலீசாருக்குப் பயந்து ஆஷ்ராவும் மற்றவர்களும் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமல்ல.

கடைசியாக 1945-ல் சுலைமான் சிறையிலிருந்து விடுதலை அடைந்தான்.

அவ்வமயம் ஆஷ்ராவினால் சுலைமானை அடையாளமே கண்டுகொள்ள முடியவில்லை. ஏற்கெனவே



நிடகாத்திரமாக இருந்த அவன் துரும்பாக இளைத்திருந்தான். அவனது நிலையைக் கண்டு ஆஷ்ரா கண்ணீர் வடித்தாள்.

கஷ்டங்கள் எல்லாம் ஒரு வழியாகத் தீர்ந்து அவர்களுடைய வாழ்க்கை மறுபடியும் இன்பகரமாக நடக்கத் தொடங்கியது.

* * *

எனினும் அந்த இன்பவாழ்க்கை அதிக காலம் நீடிக்கவில்லை. ஆஷ்ராவின் சுபாவம் முற்றிலும் மாறியிருந்தது, சலீமானுக்கு வருத்தத்தையும் ஆச்சரியத்தையும் கொடுத்தது. முன்பு அவனிடம் கலப்பற்ற அன்புடன் இருந்து வந்த ஆஷ்ரா இப்போது அவனை அலட்சியம் செய்ய முற்பட்டாள். குடும்ப காரியங்களை மறந்து அரசியல் அலுவல்களில் ஈடுபட்டாள். தன் இஷ்டப்படி சலீமான் நடந்து கொள்ளாவிடில், தான் மீண்டும் பம்பாய்க்குச் சென்று விடுவதாக மறைமுகமாக மிரட்டத் தொடங்கினாள்.

ஆரம்பத்தில் இதையெல்லாம் சலீமான் பொருட்படுத்தவில்லை. தன்னை விட்டுப் பிரிந்து குழந்தையுடன் கஷ்டப்பட்டவள் ஆதலால், அவள் மனம் கசந்து போயிருக்கிறது என்று தன்னைத்தானே ஆறுதல் செய்து கொண்டான்.

ஆனால் சலீமான் பணிந்து போகப் போக ஆஷ்ராவின் அலட்சிய புத்தியும் யதேச்சாதிகாரமும் மமதையும் அதிகமாயின. சலீமானின் பொறுமைக்கு எல்லை இல்லையா!

"ஆஷ்ரா! இது என்ன காரியம்! ஒரு நாள் கூடச் சரியான காலத்தில் சமைத்துப் போடமாட்டேன் என்கிறாயே! இப்படியே தினசரி நான் நேரம் கழித்துச் சென்றால், என் உத்தியோகத்துக்கு என்ன கதி நேரும் தெரியுமா!" என்றான் சலீமான் சிறிது படபடப்புடன்.

அவ்வளவுதான்! இத்தகைய சந்தர்ப்பத்தை அவனுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள் போல ஆஷ்ரா ஆரம்பித்து விட்டாள்.

"நான் என்ன செய்வது! என்னால் முடிந்தால் தானே! நான் இந்த வீட்டு வேலைக்காரி இல்லை. சமையல் குறித்த காலத்தில் ஆகவில்லை என்றால், நீங்களே சமைத்துக் கொள்கிறதுதானே!" என்று சரமாரியாக அடுக்கினாள்.

"குழந்தையைக் கூடச் சரியாகக் கவனிக்காமல் அரசியலில் ஈடுபடுவதுதான் குடும்ப தர்மமோ!" என்றான் சலீமான். ஒருநாளும் பிராதவாறு அவனுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

ஆஷ்ராவும் சளைக்கவில்லை.

"குழந்தை எனக்கு மாத்திரமா சொந்தம், தங்களுக்கும் சொந்தம்தானே! நீங்களே அவனை கவனித்துக் கொள்ளுங்களேன்!" என்றாள்.

"சரி, நான் அவனைக் கவனித்துக் கொள்வதாக இருந்தால், இந்த வீட்டில் உனக்கு என்ன வேலை!"

ஆஷ்ரா சிறிது நேரம் திகைத்து நின்றாள். ஆஸாதின் மீதுள்ள அன்பு ஒன்றுதான் இது வரையில் அவளுக்கும் சலீமானுக்கும் உள்ள தொடர்பு கத்தரிக்கப்படாததற்குக் காரணம். எனவே அந்தத் தொடர்பைக் கத்தரித்துக் கொண்டு விடுவது என்று தீர்மானித்தாள்!

"இந்த வீட்டில் எனக்கு வேலை இல்லை என்றால், என் குழந்தையுடன் வெளியேறி விடுகிறேன்!"



தன் உயிரையும் காட்டிலும் அதிகமாக ஆஷ்ரா மீது அன்பு கொண்டிருந்த சலீமான் அவளிடமிருந்து விஷம் தோய்ந்த பாணங்களைப்போல் அத்தகைய கொடும் வார்த்தைகளை எதிர்பார்க்கவில்லை. தன்னுடன் பேசுவது ஆஷ்ராவா என்பதே அவனுக்குச் சந்தேகமாக இருந்தது!

"ஆஸாதைப் பராமரிக்க வேண்டியதும் அவனுக்குக் கல்வி அளித்து அவனை ஒரு மனிதனைச் செய்ய வேண்டியதும் என் கடமை. கணவனைத் துச்சமாக மதித்து, குடும்பத்தின் ஒற்றுமையையும் பெருமையையும் உருக்குலைக்கும் உன்னிடம் வளர்ந்தால் அந்தக் குழந்தை எப்படி உருப்பட முடியும்!" என்றான் சலீமான். அவன் கண்கள் கோபத்தினால் கோவைப் பழம்போல் சிவந்தன.

அரசியல் மேடைகளில் ஆவேசம் ததும்பப் பேசும் ஆற்றல் தனக்கு உண்டு என்பது ஆஷ்ராவுக்குப் பம்பாய் கூட்டங்களில் பேசியபோதுதான் தெரிந்தது. அதன் காரணமாக மமதை கொண்டிருந்த ஆஷ்ராவைச் சலீமான் தன்னுடைய ஆணித்தரமான வாதத்தினால் வாயடைத்துப் போகும்படி செய்தான். அதனால் அவள் மனதில் எழுந்த கோபத் தீ சலீமான் மீதும் ஆஸாத் மீதும் அவளுக்கு இருந்த அன்பையும் பாசத்தையும் பொசுக்கிச் சாம்பராக்கிவிட்டது.

இனி, தான் பணிவாக நடந்துகொண்டாலன்றிச் சலீமானிடம் வாழ்க்கை நடத்த முடியாது என்பதை உணர்ந்த ஆஷ்ரா மறுதினமே அவனிடம் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு பம்பாய்க்குச் சென்று விட்டாள்.

இதையெல்லாம் நினைத்த போது, அன்பே உருவான கலைமானிடம் தான் அவ்விதம் நடந்து கொண்டதை அவளால் நம்ப முடியவில்லை.

"கலைமான் மீது குற்றமே இல்லை. உன் மமதையினாலும் மூடப் பிடிவாதத்தினாலும் உன் குடும்ப வாழ்க்கையில் மண்ணைப் போட்டுக் கொண்டாய்!" என்று அவள் மனம் அவளை இடித்துக் கூறியது. ஆஷ்ரா வேதனையினால் ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டாள்.

பம்பாய்க்குச் சென்ற ஆஷ்ரா சோஷலிஸ்டுக் கட்சியில் சேர்ந்து அரசியலில் தீவிரமாக ஈடுபட்டாள். ஏற்கனவே அவளுக்குக் குடும்பத்தில் சிறிது பற்றுதல் இருந்தது. இப்போது அதுவும் இல்லாததால் அவள் அரசியலில் தீவிரமாக ஈடுபடக் கேட்பானேன்! சோஷலிஸ்டுக் கட்சியில் உள்ள தீவிர வாதிகளில் அவளும் ஒருத்தியாகத் திகழ்ந்தாள்.

கலைமான் அவளுடன் சமாதானமாகப் போக விரும்புவதாகவும், இனி அத்தகைய அசம்பாவிதம் ஏற்படாதென்றும் சொல்லி அனுப்பினான். ஆனால் அதற்கெல்லாம் ஆஷ்ரா உடன்படவில்லை.

ஆஷ்ராவையோ மற்ற சோஷலிஸ்டுகளையோ கைது செய்யக் காங்கிரஸ் சர்க்கார் விரும்பவில்லை. ஆனால் நாளுக்கு நாள் அவர்களுடைய பிரசங்கங்கள் மூழு மோசமாக இருந்தன. பலாத்காரமாகச் சர்க்காரைக் கவிழ்க்கவேண்டுமென்று பிரசாரம் செய்வதாக இருந்தன.

எனவே, அதிகாரிகளுக்கு ஆஷ்ரா முதலிய சில தீவிர வாதிகளைக் கைது செய்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போய் விட்டது.

ஆஷ்ரா மீது நடந்த வழக்கில் அவள் ஆறு மாதம் தண்டனை அடைந்தாள்.

சிறையில் ஆஷ்ரா பல நாட்கள் கலைமானையும் ஆஸாதையும் நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டது உண்டு. கலைமானிடம் சொல்லிக் கொள்ளாமல் தான் அவனை விட்டுப் பிரிந்து வந்தது மன்னிக்க முடியாத மாபெருங்குற்றம் என்பதைச் சிறையில் தான் அவளால் நிதானமாக யோசித்து உணர்ந்துகொள்ள முடிந்தது.



ஆனால் இனி மேல் தான் வெட்கமின்றிக் கலைமான் முன்னிலையில் எப்படிச் செல்வது! அப்படியே சென்றாலும் அவர் தன்னை ஏற்றுக் கொள்வாரா! கணவனையும் அருமைப் புதல்வனையும் விட்டு விட்டுத் தான் வெளியேறியதற்குக் காரணம் மமதையையும் மூடப் பிடிவாதத்தையும் தவிர வேறு ஒன்றுமில்லை. தான் பொறுமையைக் கடைப்பிடித்திருந்தால் தானும் தன் குடும்பமும் சீர் குலையாமல் இருந்திருக்கலாம் என்ற எண்ணம் அவளை வாட்டியது. தான் வெளியேறிய பிறகு கூடக் கலைமான் பெருந்தன்மையுடன் எழுதிய கடிதங்களை அவள் லட்சியம் செய்தாளா!

இவ்வாறாக எல்லைப்புற மெயில் வண்டியைக் காட்டிலும் அவளுடைய சிந்தனைகள் அதி வேகமாக ஓடிக் கொண்டிருந்தன.

தனக்குக் கிடைத்த தந்தியைக் குறித்து அவள் மிகவும் கலக்கம் அடைந்தாள். அதே சமயம் தன் கணவனுடன் மீண்டும் செல்வதற்கு மேற்படி தந்தி சந்தர்ப்பம் அளித்ததைக் குறித்து மகிழ்ச்சியும் அடைந்தாள்.

*　　　*　　　*

விடியற்காலம் ஆயிற்று. ரயில் வண்டியில் அரைத் தூக்கத்தில் இருந்த யாவரும் மெதுவாக எழுந்திருக்கலாயினர்.

"ஆண்டவனே! இந்தத் தடவை என் குழந்தையைக் காப்பாற்று. நான் இனி ஒழுங்காக நடந்து கொள்கிறேன். இனி எக்காலத்திலும் நான் கலைமானின் மனம் நோக நடக்கமாட்டேன். நான் செய்த தவறுக்காக எத்தகைய கடுமையான தண்டனையையும் அனுபவிக்கத் தயாராக இருக்கிறேன்!" என்று ஆஷ்ரா மனம் உருகிப் பிரார்த்தனை செய்தாள்.

ஆஸ்பத்திரியில் படுக்கையில் இருந்த ஆஸாத் எலும்பும் தோலுமாக இருந்தான். கலைமான் தன் முகத்தை ஆஸாத்தின் முகத்துக்கு அருகில் வைத்துக் கொண்டு கவலையே உருவெடுத்தவனாகக் காணப்பட்டான்.

ஆஸாத் கண்களைத் திறந்த போதெல்லாம் "அம்மா வந்து விட்டாளா!" என்று கேட்ட வண்ணம் இருந்தான். அவன் அம்மாவைக் காண்பதற்காகவே அவனுடைய ஜீவன் உடலில் ஒட்டிக் கொண்டிருப்பது போல் தோன்றியது!

"கண்ணே! இதோ வந்து விடுவாள்" என்று அக்குழந்தைக்கு ஆறுதல் கூறினான் கலைமான் விம்மலுக் கிடையே.

ஆஷ்ரா அடிமேல் அடி வைத்து மெதுவாக உள்ளே நுழைந்தாள். அவள் வந்தது, கண்ணை மூடிக் கொண்டிருந்த ஆஸாதுக்கு எப்படியோ தெரிந்து விட்டது.

என்ன ஆச்சரியம்! எழுந்திருக்கச் சிறிதும் சக்தியற்றிருந்த ஆஸாத் 'அம்மா!' என்று எழுந்து உட்கார்ந்தான். அவனுக்குத் திடீரென்று பலம் உண்டாகி விட்டது!

'கண்ணே!' என்று அவனை அணைத்துக் கொண்டாள் ஆஷ்ரா. அவள் கண்களிலிருந்து கண்ணீர் அருவி போல் பெருகியது.

திடீரென்று ஆஷ்ராவுக்குத் தன்னை யாரோ மலை உச்சியிலிருந்து கீழே தள்ளுவது போல் இருந்தது. "ஐயோ!" என்று அலறினாள்.

குனிந்த முகத்துடன் விம்மிக் கொண்டிருந்த கலைமான் பதறிப் போய் நிமிர்ந்து பார்த்தான். அப்படியே கல்லாய்ச் சமைந்து விட்டான்.

ஆஸாதின் உயிரற்ற சடலத்தை ஆஷ்ரா இறுக அணைத்துக் கொண்டிருந்தாள். தன் தாயைக் காண வேண்டு மென்ற தாபத்துடன் காத்துக் கொண்டிருந்த ஆஸாதின் ஜீவன் அவளைக் கண்டதும் பறந்தோடி விட்டது.

ஆஸாதின் உடலை அணைத்துக் கொண்டவாறே மூர்ச்சையடைந்து கீழே விழும் தறுவாயிலிருந்த ஆஷ்ராவைக் கலைமான் பிடித்துக் கொண்டான்.



# ரகுவும் ராதையும்

**கி. வேதாந்தம்**

ராதையை மணந்து கொள்ளும் பொழுது ரகு வேலையில்லாப் பட்டதாரியாய் இருந்தான். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ராதையின் தகப்பனார் ரகுவுக்குப் பெண் கொடுக்க முன் வந்தார். ரகுவுக்குக் கல்யாணத்தில் துளிக்கூட விருப்பமில்லை. முதலில் வயிற்றுப்பாட்டுக்கு ஏற்பாடு செய்து கொண்டுதான் பாக்கி விஷயங்கள் எல்லாம் என்று பிடிவாதமாகச் சொல்லியும், அவன் தாயார் "கலியாணத்திற்கும், வேலைக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. பெண் நம் வீட்டில் காலை வைக்கும் வேளை ஏன் உனக்கு வேலையாகக் கூடாது! அப்பா தான் இருந்து உன் கலியாணத்தைப் பார்க்கக் கொடுத்து வைக்காத போனாலும், என் உடம்பு நிலைமையை உத்தேசித்தாவது என் பேச்சைத் தட்டக் கூடாது!" என்று பிடிவாதமாய்ச் சொன்னாள். எனவே ரகுவும், அவன் தாயாரும் பெண் பார்ப்பதற்காகப் பெருங்குடிக்குப் போனார்கள்.

பெருங்குடி கிராமத்தில் சுமார் இருபது வீடுகளிருந்தன. ராதையின் வீட்டு வாசலில் ஓர் எருமை மாடு கட்டியிருந்தது. கிராமமானதால் பெண் பார்க்க வந்திருப்பவர்களைப் பார்க்க எல்லா வீட்டு வாசல்களிலும் எல்லோரும் நின்று ராதையின் வீட்டையே பார்த்துக்கொண் டிருந்தனர்.

'என்ன அம்மா இது, இந்தச் சூழ்நிலையே எனக்குப் பிடிக்கவில்லையே!" என்றான் ரகு.

"போடா பயித்தியம், நத்தை வயிற்றில்தான் முத்து கிடைக்கிறது!" என்றாள் அவன் தாயார்.

ராதையின் தகப்பனார் இவர்களை வரவேற்று ரேழிக்கு அடுத்தாற்போலுள்ள கூடத்திற்கு அழைத்துப் போய் விரிக்கப்பட் டிருந்த ஜமக்காளத்தில் உட்காரச் சொன்னார். "இதோ, ஒரு நிமிஷம்' என்று கேட்டுக்கொண்டு ராதையின் தகப்பனார் வாசல் பக்கம் போனார். அதற்குள் ரகுவின் தாயாரும் எழுந்திருந்து சமையலறைப் பக்கம் போனாள். சற்று நேரத்திற் கெல்லாம் ஒரு பெண் ஒரு கையில் தீர்த்த பாத்திரத்துடனும் மற்றொரு கையில் வெள்ளித் தட்டுடனும் வெளியே வந்து ரகுவின் முன் தட்டை வைத்து விட்டு உள்ளே போய்விட்டாள். ரகுவுக்கு அந்தப் பெண் யாரென்று தெரிந்து கொள்ள முடியவில்லை. அதற்குள் பெண்ணின் தகப்பனார் வந்துவிடவே அவர், ரகுவை டிபன் சாப்பிடும்படி உபசரித்தார்.

"இந்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டுப் பையன் கூடப் பட்டணத்தில்தான் ஏதோ எண்ணெய்க் கம்பெனியில் வேலையாக இருக்கிறான்; உங்களுக்குத் தெரியுமோ, தெரியாதோ, அவன் பெயர் கூட விசுவநாதன்" என்றார் பெண்ணின் தகப்பனார்.

"பட்டணத்தில் பக்கத்து வீட்டில் யாரிருக்கிறார்கள் என்று கேட்டால்கூட எனக்குத் தெரியாது!" என்றான் ரகு.

இந்தச் சமயம் "இங்கே கொஞ்சம் வந்து விட்டுப் போங்களேன்" என்று உள்ளே இருந்து குரல் வந்தது. அவரும் எழுந்து போனார்.

சற்று நேரத்துக்கெல்லாம் ராதையின் தாயாரும் ரகுவின் தாயாரும் கூடத்துக்கு வந்தார்கள்.

"ராதே! வாம்மா இப்படி" என்று ராதையைக் கூப்பிட்டார் அவள் தகப்பனார். ரகு இந்தச் சுயம்வரத்தை வேண்டா வெறுப்பாக எதிர்பார்த்தான். அவனுக்கு முதலில் டிபன் கொண்டு வந்து வைத்த பெண் முன்னால் வந்து நின்றாள். பின்னால் அவன் தங்கையை எதிர்பார்த்தான். ரகு. அதற்குள் ராதையின் தந்தை 'ஏனம்மா நிற்கிறாய்! நமஸ்காரம் பண்ணு' என்று அந்தப் பெண்ணை நமஸ்காரம் செய்யச் சொன்னார். அந்தப் பெண்ணும் நாஸூக்காய் நமஸ்கரித்துவிட்டு ஆர்மோனியத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். இந்தப் பெண்தான் ராதை என்றறிந்த போது 'ஏது ரொம்ப பட்டிக் காடாய் இருக்கும் என்று எதிர்பார்த்தோமே! பெண் பார்ப்பதற்கு முன்னாலேயே டிபன் கொண்டு வைத்தாளே!' என்று ஆச்சரியப்பட்டான். பிறகு சுருதி போட்டுக் கொண்டு சில பாரதி பாடல்களைப் பாடினாள். ரகுவுக்குத் திருப்தியாகவே இருந்தது.

பிறகு ஊருக்குப் போய்த் தகவல் அறிவிப்பதாகச் சொல்லிவிட்டு இருவரும் விடைபெற்றுக் கொண்டார்கள்.

தாயார், பெண்ணைப் பற்றி ரகுவினிடம் அபிப்பிராயம் கேட்ட பொழுது "சுத்த பட்டிக்காடு. முகத்தில் அசடு வழிகிறது; எனக்கென்னவோ வேலை கிடைக்கும் வரை கலியாணம் செய்து கொள்வதில் இஷ்டமில்லை" என்று சொன்னான்.

"போடா! நீதான் அசடு, முகத்தில் லக்ஷ்மி களை தாண்டவமாடுகிறது. உள்ளே போய் சித்தே பேசிப் பார்த்தேனே! என்ன அழகாய் நிறுத்திப் பேசுகிறது தெரியுமா! மறுபடியும் வேலைக்கும், கலியாணத்திற்கும் பிணைக்கிறாயே! பாணி பிடிப்பவள் பாக்கியத்தினால் உனக்கு வேலையாகட்டுமே!" என்றாள் தாயார்.

ரகு ஒருவாறு விவாகத்திற்குச் சம்மதித்தான். கலியாணம் பெருங்குடி கிராமத்தில் விமரிசையாய் நடந்தது. கலியாணத்திற்கு வந்திருந்தவர்கள் மாப்பிள்ளை என்ன செய்கிறார் என்பதை அறிய ஆசைப்பட்டார்கள். 'மாப்பிள்ளை ஒரு பி. ஏ. பட்டணத்தில் வேலைக்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறார்' என்று மாமனார் சொல்லும் பதில் ரகுவுக்குத் திருப்திகரமாயில்லை. 'மாப்பிள்ளை இன்ன வேலையிலிருக்கிறார், இன்ன சம்பளம்' என்று சொல்லுவதைத் தான் விரும்பினான்.

ரகு விரும்பினதற்கேற்ப சீக்கிரமே நூறு ரூபாய் சம்பளத்தில் ஓர் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் வேலை கிடைத்தது. ரகு, ராதையுடன் குடித்தனம் நடத்த ஆரம்பித்தான். இடையே ரகுவின் தாயார் காலமானதைத் தவிர வேறு விசேஷமாக ஒரு சம்பவமும் நடக்கவில்லை.

ரகு, ராதையின் கையைப் பிடித்ததிலிருந்து வாழ்க்கைப் பாதையில் சிரமத்தையே காணவில்லை. அந்தரங்கத்தில் ராதைக்கு அலாதி மதிப்பு கொடுத்து வைத்திருந்தான். ஆனால் அவன் அதை வெளிக்குக் காட்டிக் கொள்வதில்லை. ராதை சொல்லுவதை அலட்சியமாய்க் கேட்பது போல் பாசாங்கு செய்த போதிலும் உள்ளூற அவன் சொல்வதை வரவேற்பான். "நாம் சொல்லுவதை நம் வீட்டுக்காரர் கேட்கிறார்" என்கிற எண்ணம் ராதைக்கு விழுந்துவிடக் கூடாதாம்! சில சமயங்களில் ராதைசொல்வதைக் கடைசி வரை கேட்டுக் கொண்டிருந்து விட்டு ரகு, "போதும், உன் தலை வேதனை யாருக்கு வேண்டியிருக்கிறது! அசட்டுப் பிசட்டுன்னு ஏதாவது உளறுதே!" என்பான்.

"என்னவோ எனக்குத் தோன்றியதைச் சொல்லி விட்டேன்; பிறகு உங்களிஷ்டம்!" என்பாள் ராதை. மாதா மாதம் வாங்கும் சம்பளத்தை அப்படியே விள்ளாமல், விரியாமல் ராதையிடம் கொடுப்பான் ரகு. அவன் வாங்கி வைக்கும் பணம் அனாவசியமான வழிகளில் விரயமாகாது என்பது அவனுடைய நம்பிக்கை. இந்த விதமாக ரகுவின் சம்சாரம் இன்ப வாழ்க்கையில் மிதந்து கொண்டிருக்கையில் ராதை முரளிக்குத் தாயானாள். இளம் தம்பதிகளின் கவனம் முழுவதும் குழந்தை முரளியின் பராமரிப்பில் திரும்பியது. இருந்தாலும் ரகு, சமயா சமயங்களில் ராதைக்கு அசட்டுப் பட்டம் கட்டத் தவறுவதே இல்லை.

ஒரு நாள் ஆபிஸிலிருந்து வந்ததும் குழந்தை முரளியைத் தூக்கி முத்த மிட்டான் ரகு. முரளி புன்முறுவல் பூத்தான். "ராதே! நல்ல வேளையாய் அசட்டுத்தனத்திற்கு உன்னைக் கொள்ளவில்லை முரளி!" என்றான் ரகு.

"ஏன்! 'உன்னை' என்று ஒருமையில் சொல்கிறீர்கள்—'நம்மை' என்று சொல்லுங்கள்!" என்று திருத்தினாள் ராதை.

"அப்படியானால் நானும் அசடு என்பது உன் தீர்மானமா!"

"என்னை நீங்கள் 'அசடு' என்று நினைத்துக் கொண்டிருந்தால் நீங்களும் அப்படித்தான்!"

"நாம் அசடுகளாய் இருந்தால் முரளி நமக்கு கிடைத்திருப்பானா!" என்று ராதையின் கன்னத்தை இலேசாகக் கிள்ளினான் ரகு.

"சரி, இனிமேல் நீங்கள் என்னை 'அசடு' என்று கூப்பிடக்கூடாது, குழந்தையும் நீங்கள் சொல்வதைப் பார்த்து அவனும் என்னை 'அசடு'ன்னு கூப்பிட ஆரம்பித்து விடுவான். குழந்தையை நல்ல முறையில் நாம் வளர்க்க வேண்டுமானால் நாம் நம் பேச்சிலும் நடவடிக்கைகளிலும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் நம் பழக்கம்தான் குழந்தைக்கும் வரும்!" என்று அழகாக எடுத்துச் சொன்னாள் ராதை.

ஒரு நாள் ரகுவும், ராதையும், 'தத்தக்கா பித்தக்கா' என்று நடக்கும் முரளியைப் பார்த்து ஆனந்தமாய் ரஸித்துக் கொண்டிருந்தார்கள்.

"இதுதான் வாழ்க்கை!" என்றாள் ராதை.

"பெரிய தத்துவத்தைக் கண்டுபிடித்து விட்டாய்—பச்சைக் குழந்தை 'கன்னா பின்னா' என்று நடப்பதுதான் வாழ்க்கையோ!"

"நான் ரொம்பப் படிக்கா விட்டாலும், எனக்கும் கொஞ்சம் தெரியும். 'எனக்குத் தெரியுமோ தெரியாதோ' என்று பரீக்ஷை பார்த்தால் நான் அதற்காக வெட்கப்படவுமில்லை."

"போதும், அசடு வழியாதே! அசடு என்பது சரியா யிருக்கிறது!"

"பார்த்தீர்களா! குழந்தை எதிரில் மறுபடியும் என்னை 'அசடு'ன்னு......" அதற்குள் முரளி

ழே விழுந்து 'வீல்' என்று கத்தவே குழந்தையை வாரி எடுத்துக் கொண்டாள் ராதை.

"பாவம், கால் வலிக்கிறாப்போலே இருக்கு! தலொ, தலொ, பாதம் சிவந்து போயிடுத்தே! வேண்டாண்டா கண்ணு! நாளைக்கு உனக்கு அப்பாகிட்டச் சொல்லி உன் குஞ்சுக் கால்களுக்குத் தண்டை வாங்கிப் போடறேண்டா, கண்ணு!" என்று சமாதானப் படுத்தினாள்.

அன்று ஆபீஸ் விட்டு வந்ததும் வராததுமாய் 'ராதே!' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் ரகு. உள்ளே ராதை யாருடனோ பேசுவது காதில் விழுந்தது. குரல் பழகிய குரலாயுமிருந்தது. குழந்தை முரளி காலில் குலுங்கும் தண்டையுடன் தட்டுத் தடுமாறி நடந்து வந்து ரகுவின் காலைக் கட்டிக்கொண்டு 'தாத்தா, தாத்தா' என்று ரகுவின் மாமனார் வந்திருப்பதை உணர்த்தினான். அதற்குள் ராதையும் அவள் தகப்பனாரும் கூடத்துக்கு வரவே, ரகு மாமனாரின் யோக க்ஷேமங்களை விசாரித்தான். ராதை முரளியைத் தூக்கிக் கொண்டு "அப்பாவுக்குத் தண்டையைக் காண்பித்தாயோ!" என்றாள். முரளி காலை ஆட்டினான்.

ரகு 'நன்றாயிருக்கிறது!' என்று சொல்லியவாறே குழந்தையின் காலைத்தூக்கி முத்த மிட்டான்.

"யார் வாங்கிக் கொடுத்தது!" என்றாள் ராதை.

"தாத்தா!" என்று தன் சின்னஞ் சிறு வாயால் சொன்னான் முரளி.

"என்ன சமத்து, என்ன சமத்து!" என்று நெட்டி முறித்தாள் ராதை.

இரண்டு நாளைக்குப் பிறகு, ராதையைக் கொஞ்ச நாள் கழித்து அனுப்புவதாய்ச் சொல்லி ரகுவின் மாமனார் அவளைத் தம் ஊருக்கு அழைத்துப்போனார். ரகுவுக்கு ராதையும், குழந்தையும் இல்லாதது மிகவும் கஷ்டமாக இருந்தது.

ஒரு நாள் ரகு ஆபீஸுக்குப் போனதும், மானேஜர் ரகுவைக் கூப்பிட்டனுப்பினார்.

"என்ன மிஸ்டர் ரகு, உம்மைத் திருச்சி கிளை ஆபிசுக்கு மாற்றுவதாக நம் தலைமை ஆபீஸின் உத்தேசம். உம் சௌகரியம் எப்படி! என்ன சொல்லுகிறீர்!" என்று கேட்டார் மானேஜர்.

'எனக்குத் திருச்சிக்கு மாற்றலா! இப்பொழுது தான் ஜாகை வசதிகள் செய்து கொண்டு இரண்டு வருடகாலமாய் நிம்மதியாய் வாழ்க்கையை நடத்துகிறேன். இந்தச் சமயத்தில் ஜாகையை கலைப்பதா!' என்று எண்ணிக் கொண்டு "வேறு யாரையாவது அனுப்பிவிடுங்கள், சார்" என்று சொல்ல நினைத்தான் ரகு. எதற்கும் ராதையைக் கலந்து கொண்டு தான் சொல்ல வேண்டு மென்று நினைத்து "இன்னும் இரண்டு மூன்று தினங்களில் சம்மதம் தெரிவிக்கிறேன்" என்று கூறி மானேஜரிடம் விடை பெற்றுக் கொண்டான் ரகு. ராதைக்கு அன்றே கடிதம் எழுதினான்.

'ராதே! நீயும் முரளியும் சுகமென்றே நம்புகிறேன். என் ஆபீஸ் விஷயமாய் உன்னை ஒரு யோசனை கேட்கப் போகிறேன். அதற்காக ஏது நம்ம வீட்டுக்காரர் நம்மைக் கேட்காமல் ஒன்றும் செய்வதில்லை. என்று கர்வம் கொண்டு விடாதே! எங்கள் ஆபீஸில் என்னைத் திருச்சிக்கு மாற்றுவதாக உத்தேசித்திருக்கிறார்கள். ஒப்புக்கொண்டால் அநேக சிரமங்கள் இருக்கின்றன. திடீரென்று இந்த ஜாகையைக் கலைக்க நேரிடும். போகிற ஊர் நமக்கு ஒத்துக் கொள்ள வேண்டும். இதையெல்லாம் உத்தேசித்து மாற்றலை நான் உடனடியாய் ஏற்கவில்லை. உன் அபிப்பிராயம் என்ன? —ரகு."

ராதையிடமிருந்து பதில் வந்தது.

"அநேக நமஸ்காரம், கடிதம் கிடைத்தது. நாம் ஒருவரிடத்தில் உத்தியோகம் பார்த்தால், நம் சௌகரியத்துடன் அவர்கள் சௌகரியத்தையும் கவனிக்க வேண்டும். மாற்றலை ஏற்பது அல்லது விடுவது என்பதை உங்கள் இஷ்டத்திற்கு விட்டிருந்த போதிலும் நீங்கள் ஏற்று நடப்பதைத்தான் உங்கள் கம்பெனி எதிர் பார்ப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஏதோ, உங்கள் மீது நம்பிக்கை யிருப்பதினால்தான் உங்களை மாற்ற உத்தேசித்திருப்பதாக நினைக்கிறேன். ஜாகை வசதியைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். அது வரை நான் இங்கு இருந்து கொள்கிறேன். மாற்றலை ஏற்கலாம். உங்களிஷ்டம். எனக்கு அசட்டுப் பட்டம் கட்டாதீர்கள்—ராதை."

ரகு தன்னைத் திருச்சிக்கு மாற்றுவதைப் பற்றித் தன் சம்மதத்தைத் தெரிவித்துக் கொண்டான். ஒரு வாரம் கழித்து பம்பாய் தலைமைக் காரியாலயத்திலிருந்து ரகுவுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் "உம்மை நமது திருச்சி கிளை ஆபிசுக்கு மானேஜராய்ப் போட்டிருக்கிறது. சார்ஜ் ஒப்புக்கொண்ட தேதியிலிருந்து உமது சம்பளம் முந்நூறு ரூபாய். சார்ஜை உடனே ஒப்புக் கொண்டு ரிபோர்ட் செய்யவும்" என்று கண்டிருந்தது.

உடனே ரகு ராதைக்குக் கடிதம் எழுதினான்:

"அன்புள்ள ராதே! உன் யோசனையின்படி திருச்சிக்கு மாற்றிக் கொள்ள என் சம்மதத்தைத் தெரிவித்துக் கொண்டேன். என்னைத் திருச்சி கிளை ஆபிசுக்கு மானேஜராய்ப் போட்டு, சம்பளமும் ரூபாய் இரு நூறு கூட்டித் தந்திருக்கிறார்கள். இதற்குக் காரணம் நீதான். 'ஏர் பிடிப்பவன் எப்படி இருந்தாலென்ன பானை பிடிப்பவளல்லவா பாக்கியசாலியாய் இருக்க வேண்டும்!' என்று என் அம்மா சொன்னது இன்னும் என் காதில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது. நான் வருகிற சங்கராந்திக்கு அங்கு வரும்போது உன் பானை பிடிக்கும் அதிர்ஷ்டக் கைகளுக்கு ஒரு ஜோடி வளையல் செய்து கொண்டு வருகிறேன். முரளியை கவனித்துக் கொள். அசட்டுத்தனமாய் அஜாக்கிரதையாய் இராதே.—ரகு"



ரயில் பிரயாணி:—ஸார், உங்கள் பெட்டியைக் கொஞ்சம் வழியை விட்டு எடுக்கிறீர்களா? எல்லாரும் தடுக்கி விழுகிறார்கள்!

மற்றவர்:—இருக்கட்டும், இருக்கட்டும்! வேண்டும் என்று நான் வைத்திருக்கிறேன். எனக்கு ஞாபக மறதி அதிகம். யாராவது தடுக்கி விழுவதைப் பார்த்தாவது பெட்டியின் ஞாபகம் வருமல்லவா?

# மத்திய கேந்திரம்

## ஜெயமணி

### துருக்கி—10

வெகுகாலமாக அனுஷ்டானத்திலிருந்து வரும் பாஷையையோ அல்லது லிபியையோ மாற்றுவது மிகவும் கஷ்டமான காரியம் என்று பலரும் கருதினர். எனினும் கெமால் பாஷா மனம் வைத்து விட்டால், பிறகு அவ்விஷயத்தைத் தடுக்க வல்லவர் யார்?

ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு துருக்கியில் சகலரும் லத்தின் லிபியையே உபயோகிக்க வேண்டும் என்று சட்டம் நிறைவேறியது. அரபு லிபியைக் கெமால் பாஷா சர்க்கார் அறவே தடை செய்தனர்.

பதினாறு வயதுக்கு மேல் நாற்பது வயதுக்கு உட்பட்ட சகலரும் லத்தின் லிபியைக் கட்டாயமாகக் கற்றுக் கொண்டே தீர வேண்டும் என்று சர்க்கார் உத்தரவிட்டனர். அதற்காகப் பிரத்தியேகமாகக் கல்வி சாலைகள் அமைக்கப் பட்டன.

லத்தின் லிபியைக் கற்றுக் கொள்ளாத அதிகாரிகள் வேலையி லிருந்து நீக்கப்படுவார்கள் என்று சர்க்கார் எச்சரித்தனர்.

சிறைகளில் உள்ள கைதிகள் லத்தின் லிபியைக் கற்றுக் கொண்டாலன்றி, தண்டனைக் காலம் முடிந்தாலும் கூட விடுதலை செய்யப்பட மாட்டார்கள் என்ற விசித்திரமான உத்தரவும் பிறந்தது!

பத்திரிகைகள், புத்தகங்கள் எல்லாம் லத்தின் லிபியிலேயே பிரசுரிக்கப்பட வேண்டும் என்றும் கட்டளை பிறப்பித்தார்கள்.

துருக்கி பாஷைக்கு லத்தின் லிபியையே உபயோகிக்க வேண்டும் என்பது ஸ்தாபிக்கப்பட்ட தெனினும், அவ்விஷயமாக மற்றொரு சிக்கல் ஏற்பட்டது.

வெகு காலமாகத் துருக்கி பாஷையில் ஏராளமான அரபு வார்த்தைகளும் பாரசீக வார்த்தைகளும் கலந்திருந்தன. அந்த வார்த்தைகளை லத்தின் லிபியில் எழுதுவது கஷ்டமாக இருந்தது. அந்தத் தொல்லையைச் சமாளிக்கக் கெமால் பாஷா என்ன செய்தார் தெரியுமா? துருக்கி பாஷையிலிருந்து அரபு, பாரசீக வார்த்தைகளை அறவே ஒழித்து விடுவதென்று உறுதி கொண்டார்! அந்த உறுதியை நிறைவேற்றுவதில் பெரும்பாலும் வெற்றியும் பெற்றார்!

அதன் விளைவாகவே துருக்கியில் உள்ள நகரங்களின் பெயர்கள் மாறின. கான்ஸ்டாண்டிநோபிள் இஸ்தான்புல் ஆயிற்று. அங்கோரா அங்காராவாக மாறியது. ஸ்மிர்னா நகரம் இஸ்மீர் நகரமாயிற்று. இவ்விதமாக எத்தனையோ பெயர்கள் உருத் தெரியாமல் மாற்றப்பட்டன.

மேற்படி மாறுதலுக்கு இணங்க கெமால் பாஷா தமது பெயரைக் கெமால் அடாடர்க் என்று மாற்றிக் கொண்டார்!

உலக சரித்திரத்தில் கெமால் பாஷாவைப் போல் வேறு எந்த தேசத் தலைவரும் பாஷை விஷயத்தில் துணிந்து இவ்வளவு தீவிரமான மாறுதல்களைச் செய்ததில்லை.

துருக்கியின் சுதந்திரத்துக்காகவும் முன்னேற்றத்துக்காகவும் பாடுபட்டு மகத்தான வெற்றி பெற்ற கெமால் பாஷா 1938 நவம்பர் மாதம் காலமானார்.

இன்று புகழுடனும் பெருமையுடனும் விளங்கும் நவீன துருக்கியே அவருக்கு ஞாபகச் சின்னமாக இருந்து வருகிறது.




உலக நாடுகளுக்கெல்லாம் ஏற்றுமதியாகும் அத்திப் பழங்களைப் பெட்டியில் அடுக்கி வைக்கும் துருக்கிப் பெண்.

கெமால் பாஷாவுக்குப் பிறகு இஸ்மெத் இனேனு துருக்கிக் குடியரசின் தலைவரானார்.

இரண்டாவது உலக மகா யுத்தம் சூண்டு காலு வருஷங்களுக்கு மேல் துருக்கி நடுநிலைமை வகித்து வந்தது. அக்காலத்தில் துருக்கியைத் தங்கள் பக்கம் சேர்த்துக் கொள்வதற்காக ஒரு புறம் பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகளும் மற்றொரு புறம் ஜெர்மனியும் செய்த சாகஸங்கள் உலக ராஜதந்திர நாடகத்தில் ருசியான ஓர் அத்தியாயமாக விளங்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இறுதியில் 1945-ம் வருஷம் ஆரம்பத்தில் தான் அதாவது யுத்தம் முடி-

வடைவதற்குச் சில மாதங்களுக்கு முன்தான் துருக்கி அச்சு நாடுகள் மீது யுத்தப் பிரகடனம் செய்தது!

சென்ற மகாயுத்தத்துக்குப் பின் ருஷ்யாவின் சில கோரிக்கைகளுக்குத் துருக்கி இணங்காததால், ருஷ்யா துருக்கியுடன் செய்து கொண்டிருந்த நட்பு உடன்படிக்கையைக் கத்தரித்துக் கொண்டு விட்டது.

எனவே, இன்று மத்திய கேந்திரப் பிரதேசத்தில் துருக்கி பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகளுக்கு மிகவும் ஆதரவாக இருந்து வருகிறது.

* * *

சுமார் மூன்று லட்சம் சதுரமைல் விஸ்தீர்ணம் உள்ள, அதாவது பிரிட்டனைப்போல் மூன்று மடங்கு பெரிதான துருக்கி கருங்கடலுக்கும் மத்தியதரைக் கடலுக்கும் இடையே இருப்பதால், அது மத்திய கேந்திரநாடுகளில் முக்கியமானதாகத் திகழ்ந்து வருகிறது.

ஐரோப்பாவில் பெரும்பகுதி ஒரு காலத்தில் துருக்கி சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டதாக இருந்தது அல்லவா? ஆனால் இன்று ஐரோப்பாவைச் சேர்ந்த சுமார் பத்தாயிரம் சதுரமைல் பரப்பு உள்ள பிரதேசம் மாத்திரமே துருக்கிக்குச் சொந்தமாக இருக்கிறது.

துருக்கி நாட்டின் ஜனத்தொகை சுமார் இரண்டு கோடியாகும்.

அது கரங்கச் செல்வம் மிகுந்த தேசமென்றாலும், அச் செல்வம் இன்னும் அபிவிருத்தி செய்யப்படவில்லை.

துருக்கியில் உள்ள மக்களில் எழுபது சதவிகிதம் பேர் விவசாயத்தையே ஜீவனமாகக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த நாட்டில் அத்திப் பழங்கள் அதிகமாக உற்பத்தியாகின்றன. துருக்கி அத்திப் பழங்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. எனவே அவற்றை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதன் மூலம் அத்தேசத்துக்கு ஏராளமாக வருமானம் கிடைக்கிறது.

* * *

துருக்கியின் தலைநகரான அங்காராவில் ஒன்றரை லட்சம் ஜனங்களுக்குமேல் வசிக்கிறார்கள். கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன் அங்காரா மிகவும் சுபிட்சம் பொருந்திய பெரும் நகரமாக இருந்தது.

ஆனால் பிறகு காலக்கிரமத்தில் அதன் உருவமும் பெருமையும் குன்றிவிட்டன. முதலாவது மகாயுத்தம் ஆரம்பமானபோது அங்காரா ஒரு சிறிய கிராமமாகவே இருந்தது!

ஆனால் இப்போது அது உலகத்திலுள்ள மற்ற சிறந்த நகரங்களைப் போல் எல்லா நவீன வசதிகளுடனும் விளங்குகிறது.

துருக்கியின் பழைய தலைநகராக விளங்கிய கான்ஸ்டாண்டிநோபிளில் (இஸ்தான்புல்) எட்டு லட்சம் ஜனங்களுக்கு மேல் வசிக்கிறார்கள். துருக்கியிலேயே இதுதான் பெரிய நகரம் என்பதுடன் சரித்திரப் பிரசித்தி பெற்ற, மிகப் புராதனமான நகரமும் ஆகும்.

---




## 6. எதிர்பாராத உதவி

சூரியன் உதயமாகிச் சற்று நேரத்துக்கெல்லாம், வெய்யில் 'சுரீர்' என்று உறைக்க ஆரம்பித்தது. கமலம் இப்பொழுதுதான் இந்த உலக நினைவுக்கு வந்தாள். இதுவரையில் காடு என்பதையே பார்த்தறியாத கமலத்துக்கு, இப்பொழுது காட்டில் இருப்பதை நினைக்க ஆச்சரியமா யிருந்தது. வெய்யில் என்றால் என்னவென்றே தெரியாமல் அரண்மனையில் வாழ்ந்து வந்த கமலத்துக்கு இந்தக் காலை வேளை வெய்யிலே தாங்க முடியாததா யிருந்தது. அத்துடன் அவ்வளவு தூரம் நடந்து வந்தது அவளுக்கு மிகவும் அலுப்பாக இருந்தது. இருந்தாலும் எத்தனை நேரம் தான் அங்கேயே உட்கார்ந்திருக்க முடியும்? மெதுவாக எழுந்து நடக்க ஆரம்பித்தாள்.

கரடுமுரடான அந்தக் காட்டுப் பாதையில் நடப்பது கமலத்துக்கு மிகவும் சிரமா யிருந்தது. மேலும் அவள் காடுகளைப் பற்றிக் கதைகளில் படித்திருக்கிறாள். அந்தக் காடுகளில் கொடிய மிருகங்களெல்லாம் உலாவித் திரியும் என்றும் அவள் படித்திருக்கிறாள். இப்பொழுது அவளுக்கு அந்தக் கொடிய மிருகங்களின் நினைவு வந்ததும் பயமா யிருந்தது.

நல்ல வேளையாக இதுவரையில் எந்தக் கொடிய மிருகமும் அவள் எதிரில் வரவில்லை. சுற்றிலும் இருந்த புதர்களிலிருந்து ராமபாணம் மாதிரி விர் விர்ரென்று முயல்கள் விரைவாக ஓடின. அது கமலத்துக்கு மிகவும் உற்சாகத்தைத் தந்தது.

கொஞ்ச தூரம் போனதும் இதுவரையில் இல்லாத சில்லென்ற காற்று வீசத் தொடங்கியது. கமலத்தின் களைப்பை அது கொஞ்சம் ஆற்றியது. கமலம் மேலும் மேலும் நடந்து கொண்டே யிருந்தாள்.

சூரியன் வான வீதியில் வேகமாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தான். வெய்யில் வர வர, கடுமையாகிக் கொண்டிருந்தது. மனித சஞ்சாரமற்ற அந்தக் காட்டில் பாவம், கமலம் வெகுதூரம் போய்விட்டாள். அவள் கால்கள் மேலும் நடக்க மறுத்துவிட்டன. அவள் மிகவும் சோர்ந்து விட்டாள்.

அச்சமயம் ஒரு அழகிய நீர் ஓடை குறுக்கிட்டது. அந்த ஓடையில் மிகவும் தெளிவான ஜலம் சலசல வென்னும் ஓசையுடன் ஓடிக் கொண்டிருந்தது. கமலத்துக்கு அந்த ஓடையைக் கண்டதும் உற்சாகம் தாங்க முடியவில்லை. கை, கால், முகங்களையெல்லாம் அந்தக் குளிர்ந்த ஜலத்தில் அலம்பிக் கொண்டு இரண்டு மூன்று கை ஜலத்தை அள்ளிக் குடித்தாள். கமலத்தின் களைப்பெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. அவள் உடம்பிலும் மனசிலும் ஒரு புதிய உற்சாகம் உண்டாயிற்று.

சற்று நேரம் அந்த ஓடைக் கரையிலேயே களைப்பு ஆறிவிட்டு, கமலம் மறுபடியும் நடக்க ஆரம்பித்தாள்.

பெரிய பெரிய மரங்களும் முள் புதர்களும் பாம்புப் புற்றுகளும் நிறைந்த அந்த வனப் பிரதேசத்தில் வழி கண்டுபிடித்துக் கொண்டு போவது மிகவும் கஷ்டமா யிருந்தது. அந்தச் சிரமங்களை யெல்லாம் பொருட் படுத்தாமல் அந்தக் கொடிய காட்டுப் பாதையில் கமலம் மட்டும் தன்னந்தனியாக நடந்து கொண்டே யிருந்தாள். ரொம்ப தூரம் நடந்த பிறகு, கமலத்தினால் நடக்கவே முடியவில்லை.

சூரியன் வானத்தின் உச்சியை அடைந்து விட்டான். கமலத்துக்குப் பசி காதை

அடைந்தது. கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. அவளுடைய கால்கள் தாமாகவே தள்ளாட ஆரம்பித்தன.

அந்தச் சமயம் கமலத்தின் காலில் ஒரு மரத்தின் வேர் பட்டுத் தடுக்கியது. பாவம், கமலம் கீழே விழுந்து விட்டாள். அவளுக்கு நினைவு தப்பி விட்டது.

கமலம் விழித்துக் கொண்டு பார்த்த போது தான் ஒரு குடிசையில் கயிற்றுக் கட்டிலின் மேல் படுத்துக் கொண்டிருப்பது தெரிந்தது.



அவள் அரண்மனையிலிருந்து அதிகாலையில் புறப்பட்டது, வெகுதூரம் காட்டுப் பாதையில் நடந்தது, பிறகு களைப்படைந்து எங்கேயோ கீழே விழுந்தது முதலிய சம்பவங்களெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக அவள் நினைவுக்கு வந்தன. ஒரு வேளை அரண்மனை அந்தப்புரத்தில் படுத்துக் கொண்டு கனவு காண்கிறோமா என்று அவளுக்கே சந்தேகமாய்ப் போய்விட்டது.

“அம்மா, ராஜகுமாரியைப் போல அழகாயிருக்கிறாயே! நீ யாரம்மா? இந்தக் கொடிய காட்டுப் பிரதேசத்துக்கு எப்படி வந்து சேர்ந்தாய்? இந்தா, இந்தப் பழங்களையும் பாலையும் சாப்பிட்டு விட்டு நிதானமாகச் சொல்லு, அம்மா!” என்று மிகவும் அன்போடு யாரோ பேசுவது கமலத்தின் செவிகளில் நன்றாய்க் கேட்டது.

கமலம் மிகவும் சிரமத்துடன் எழுந்து உட்கார்ந்தாள். உண்மையிலேயே தான் ஒரு குடிசையில் இருப்பது தெரிய வந்தது. தான் காண்பது கனவல்ல என்பதும் கமலத்துக்கு நிச்சயமாய்த் தெரிந்தது.

கட்டிலுக்கு அருகில் ஒரு சின்ன மூங்கில் நாற்காலியின் மேல் ஒரு தட்டில் பழங்களும் ஒரு டம்ளரில் பாலும் வைக்கப் பட்டிருந்தன.

சற்று முன் அவள் காதுகளில் விழுந்த அன்பு வார்த்தைகள் இன்னும் அப்படியே ஒலித்துக் கொண்டிருந்தன. இளமையிலேயே தாயை இழந்த கமலம் அந்த மாதிரியான அன்பு வார்த்தைகளைக் கேட்டதே யில்லை. சித்தியின் கடு சொற்களைக் கேட்டே பழகிப் போன அவள் காதுகளுக்கு இந்த வார்த்தைகள் அமிர்தம் போலிருந்தன.

கமலம் சுற்று முற்றும் பார்த்தாள். எதிர்ப் புறத்திலிருந்த அறையிலிருந்து ஒரு கிழவி வந்தாள். அந்தக் கிழவிதான் அவ்வளவு அன்பாகப் பேசியவள் என்று கமலம் ஒருவாறு புரிந்து கொண்டாள்.

அந்தக் கிழவி கமலத்தின் அருகில் வந்து அவள் தலையை அன்புடன் தடவினாள்.

“பாட்டி, நான் ஒரு ராஜகுமாரிதான். அரண்மனையில் வாழ்ந்து வந்தவள்தான். இந்த அமரபுரி ராஜ்யத்தின் இளவரசி நான்; அரசனுக்கு அருமையாகப் பிறந்தவள். மகா வீரர்களான பதினொரு அண்ணன்மார்கள் எனக்கு இருந்தும் இப்படிப் பசியோடு காட்டில் அநாதையாகத் தவிக்கும் படியான நிலைமை ஏற்பட்டு விட்டது!” என்று கூறும் பொழுதே கமலம் துக்கத்தினால் விம்மி அழுதாள்.

கிழவி, கமலத்தின் கண்களில் பெருகி வந்த கண்ணீரைத் துடைத்து, அவளைத் தேற்றினாள். அன்போடு அவளுக்குப் பழமும் பாலும் கொடுத்து அவளது பசியையும் களைப்பையும் போக்கினாள்.

கமலத்துக்கு இப்போது களைப்பெல்லாம் நீங்கி விட்டது. அந்தக் கிழவியிடம் இளைய ராணியின் கொடுமையைப் பற்றியும், அவள் செய்த சூழ்ச்சியினால் தன் அண்ணன்மார்கள் உருவம் மாறி எங்கோ காணாமற் போனதைப் பற்றியும் சொன்னாள்.

கிழவி அவள் கதை முழுவதையும் கேட்டுக் கண்ணீர் விட்டாள். கமலத்துக்குப் பல விதத்திலும் ஆறுதல் வார்த்தைகள் சொன்னாள். மனம் விட்டு அந்தக் கிழவியிடம் தன் சோகக் கதையைச் சொல்லி அழுததில் கமலத்துக்குத் தன் மனதில் அழுத்திக் கொண்டிருந்த பாரம் குறைந்த மாதிரி இருந்தது.

அவள் விழித்து எழுந்ததும் கிழவி மீண்டும் அவளுக்குப் பழங்கள் கொடுத்தாள்.

“அம்மா கமலம், உன்னிடம் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டும். நான் இரண்டு நாட்களுக்கு முன்பு, இங்கிருந்து ஐந்து மைல் தூரத்தில் இருக்கும் ஆற்றுக்குப் போனேன். அந்த ஆற்றங்கரையோடு இரண்டு மைல் தூரம் போனால் சமுத்திரத்தை அடையலாம். அங்கே அடிக்கடி நான் மீன் பிடிக்கப் போவதுண்டு. மூந்தா நாள் அங்கே ஒரு அதிசயத்தைப் பார்த்தேன். பொன்னிறமான பதினொரு அன்னப் பறவைகள் வரிசையாக நீந்தின. பிறகு எல்லாம் ஒரே கூட்டமாகப் புறப்பட்டு எங்கோ பறந்து சென்றன. அஸ்தமன வெய்யிலில் அதன் இறக்கைகள் பளபள வென்று மின்னின. ஒருவேளை அந்த அன்னப் பறவைகள்தான் உன் அண்ணன்மார்களோ என்னவோ! உன் சித்தி மந்திரவாதியின் உதவியைக் கொண்டு அவர்களை அப்படி மாற்றி யிருக்கலாம் அல்லவா? இதோ பார்! ஒரு பொன் இறகு. அவை பறந்தபோது கீழே விழுந்தது!” என்று கூறிக் கிழவி கமலத்திடம் ஒரு பொன் இறகைக் கொடுத்தாள். (தொடரும்)

ஏழாந்தேதி வந்துவிட்டால் எங்கள் ஆபீஸில் ஒரே கலாட்டாதான். அன்றுதான் எங்களுக்குச் சம்பள தினம். காஷியர் கிருஷ்ணசாமி ஐயங்கார் ஆபீஸில் உள்ள அத்தனை பேருடைய 'கோட்டா' வுக்கும் ஈடு கொடுத்தாக வேண்டும்.




அக்ஷயம்

"இன்று இந்தக் காஷியரால் எனக்கு ஐந்து அணா தண்டம், அப்பா!" என்பார் ஒரு நண்பர்.

"ஏன்? அவரால் என்ன தண்டம்?" என்று கேட்பார் இன்னொருவர்.

"ஏனா? இன்று அவர் காரணமாகத்தானே நான் ஒரு ஸன்லைட் ஸோப்பு வாங்கும்படியாகி விட்டது!"

"நியாயம்தான், நியாயம்தான்! அவர் கொடுக்கும் அழுக்கு நோட்டுக்களைத் தொட்டு விட்டால் கைகளை ஸோப்புப் போட்டுக் கழுவ வேண்டியதுதான்!" என்று முதல்வர் சொல்லை ஆமோதிப்பார் வேறு ஒருவர்.

இன்னொருவர் பளிச்சென்று இருக்கும் வெள்ளைத்தான் ஒன்றை நீட்டி, "நான் நோட்டுக்களைக் கையால் தொடமாட்டேன்! இதனால் தான் தூக்குவேன்!" என்று சொல்லி எப்படி நோட்டை எடுப்பது என்பதை அபிநயம் பிடித்தே காட்டி விடுவார்.

இவ்வளவு கேலிச் சொற்களையும் பரிகாசச் சொற்களையும் கேட்டுக்கூடக் கிருஷ்ணசாமி ஐயங்கார் இலேசாக இளநகையை வரவழைத்துக் கொண்டு மௌனமாகவே இருப்பார்.

"ஏன், காஷியர் ஸார்! புது நோட்டாக வாங்கி வரக் கூடாதோ?" என்று இடித்துக் கேட்டால், "சம்பளத்துக்கு இரண்டு நாட்கள் முன்பாகவே சென்று வாங்கி வந்தால் புது நோட்டாகக் கிடைக்கும்! இன்று போனால் பாங்குக்காரர்கள் அடித்துக் கொள்ளுகிறார்கள், ஸார்! எல்லா ஆபீஸ்களிலும் இருந்து சம்பளப் பட்டுவாடாவுக்காக ஏகக் கூட்டமாக வந்து கூடி இருக்கும்பொழுது எப்படி ஸார், நமக்கு மட்டும் என்று புது நோட்டுக்கள் கேட்க முடியும்? அதனால் தான்......" என்று ஏதேதோ சாக்குச் சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்ப்பார்.



"இன்று ஏழாந்தேதி தானே, ஐயா! முதல் தேதி இல்லையே!" என்று ஏதாவது குறுக்குக் கேள்வி கேட்டோமானால், "இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லி எழுந்து எங்காவது சிறிது நேரம் தலை மறைவாக இருந்து விட்டு வருவார். எப்படி எப்படியெல்லாமோ மடக்கிக் கேட்டும், அவர் தாம் பழைய நோட்டுக்கள் வாங்கி வரும் சிதம்பர ரகசியத்தைத் தில்லை வெளியாக்கியதில்லை. தம்மை யார் யார் அதிகமாகக் 'கோட்டா' செய்கிறார்களோ, அவர்களுக்குச் சம்பளத் தேதி அன்று இருப்பதற்குள் அதிக அழுக்கு நோட்டாகப் பொறுக்கி எடுத்துக் கொடுத்து அவர்களை வஞ்சம் தீர்த்துக் கொள்ளவும் அவர் தவறியதில்லை.

அன்றும் ஏழாந் தேதி. சம்பந்தம் ஆபீஸுக்கு வந்திருந்தான். அவன் காஷியர் கிருஷ்ணசாமி ஐயங்காருக்கு அத்தியந்த நண்பன். கார் வாங்கின புதிதா? ஆகவே, காரை எடுத்துக் கொண்டு அவரைப் பார்க்க வந்திருந்தான். கிருஷ்ணசாமி ஐயங்காருக்கு என்ன தோன்றிற்றோ, தெரியவில்லை! ஜம்மென்று அவன் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டு பாங்குக்குப் புறப்பட்டார். அதைக் கண்ட வாயாடி வேங்கடராமனும் டவுனில் ஏதோ வேலையிருப்பதாகக் கூறி அவருடன் காரில் தொத்திக் கொண்டான்.

பாங்கிக் கௌண்டரில் செக்கை நீட்டி விட்டு 'டோக்கன்' வாங்கிக் கொண்ட காஷியர் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்தார், தம் நம்பரை எப்பொழுது கூப்பிடுவார்கள் என்று காதைத் தீட்டி வைத்துக் கொண்டு.

பத்துப் பதினைந்து நிமிஷங்களுக்கெல்லாம் வேங்கடராமனும் தன் அலுவல்களை முடித்துக் கொண்டு காஷியரைப் பார்க்கப் பாங்குக்கு வந்து விட்டான். பாங்குக் காஷியர் கிருஷ்ணசாமி ஐயங்காரின் நம்பரைக் கூப்பிடவும், வேங்கடராமன் எங்கள் காரியாலயத்துக் காஷியரைத் தேடிக்கொண்டு உள்ளே நுழையவும் சரியாக இருந்திருக்கிறது.

பாங்குக் காஷியர் கத்தை கத்தையாகப் புது நோட்டுக்களை எடுத்துக் கிருஷ்ணசாமி ஐயங்காரின் முன்னால் போட்டுக் கொண்டிருந்தார். கிருஷ்ணசாமி ஐயங்கார் அதைப் பார்த்ததும் பேய் அறைந்தவர் போல, "ஸார்! புது நோட்டுக்கள் வேண்டாம், ஸார்! பழைய நோட்டுக்களே கொடுங்கள், போதும்!" என்று கெஞ்சினார்.

"உமக்குப் பழைய நோட்டுக்களை எண்ணிக் கொடுத்துக் கொண்டிருக்க எனக்குப் பொழுதில்லை. இன்னும் உமக்குப் பின்னால் எத்தனை பேர் நிற்கிறார்கள்? இதை வாங்கிக் கொண்டு போம், ஐயா!" என்று கடிந்து கொண்டார் பாங்குக் காஷியர்.

"ஸார், எனக்காகத் தயவு செய்து..." என்று கிருஷ்ணசாமி ஐயங்கார் காலில் விழாத தோஷமாகக் கெஞ்சவே, பாங்குக் காஷியர் அவர்மேல் பரிதாபப் பட்டுப் பழைய நோட்டுக்களாகத் தேடி எடுத்து எண்ணிக் கொடுக்கலானார்.

அதற்குள் வேங்கடராமன், "ஸார்! புது நோட்டுக்களாகக் கொடுங்கள், ஸார்!" என்று சொல்லிக் கொண்டே

பாங்கிக் கௌண்டரை நெருங்கி விட்டான். "உம் ஆபீஸ் காஷியர் வந்தால் ஒவ்வொரு தடவையும் இதே தொந்தரவுதான், ஐயா! புது நோட்டுக் கொடுத்தால் வாங்கிக்கொள்ளவே மாட்டேன் என்கிறார்!" என்று பாங்குக் காஷியர் கிருஷ்ணசாமி ஐயங்காரைக் குறை கூறியவாறே, "ஏன் ஐயா, எல்லோரும் 'புது நோட்டுக் கொடுங்கள், புது நோட்டுக் கொடுங்கள்' என்று அடித்துக் கொள்ளுகிறார்கள். நீர் என்னடா வென்றால் பழைய நோட்டுக்களுக்காக......" என்றார்.

அவர் சொல்லி முடிப்பதற்குள்ளாகக் கிருஷ்ணசாமி ஐயங்கார், "இல்லை, ஸார்! கொஞ்ச நாட்களுக்கு முன் பேப்பரில் ஒரு செய்தி வந்திருந்ததே, நீங்கள் பார்க்கவில்லையா? பொய் நோட்டுக்கள் உலாவுகின்றன. புது நோட்டுக்களை வாங்கி ஏமாறுகிறீர்கள் என்று அறிக்கை விட்டிருந்தார்களே! பழைய நோட்டுக்கள் என்றால் பத்துக் கைகள் மாறிச் செலாவணி ஆகியிருக்கின்றன என்றாவது நிச்சயமாக நம்பலாம். ஆனால் புது நோட்டுக்களை எப்படி ஸார் நம்ப முடியும்? அதனால்தான்......" என்றார்.

இதைக் கேட்ட பாங்குக் காஷியருக்கு என்ன பதில் சொல்லுவதென்று சட்டென்று விளங்கவில்லை. கிருஷ்ணசாமி ஐயங்காரின் சிதம்பர ரகசியத்தைப் புரிந்து கொண்ட வெங்கடராமன், பாங்கிக் காஷியரிடம் எங்கள் ஆபீஸில் உள்ளவர்கள் அவரைப் பரிகாசம் செய்யும் விஷயத்தைச் சொல்லித் தானும் சிரித்துப் பாங்குக் காஷியரையும் சிரிக்க வைத்தான். ஆயினும் கிருஷ்ணசாமி ஐயங்காரின் முகத்தில் பழைய நோட்டுக்களை வாங்கி விட்டோம் என்ற பெருமை உணர்ச்சி பளிச்சென்று ஒளி வீசிக்கொண்டுதான் இருந்தது.

# படித்துப் பாருங்கள்!

## மஞ்சுளா

நடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த இந்தக் கதையில் மர்மங்களுக்குப் பஞ்சமில்லை. ஒரு ரயில் வண்டிப் பாதையில் நடந்த மர்மக் கொலையின் மர்மங்கள் துப்பறிபவன் ஒருவனுடைய மேதையினால் கதையின் முடிவில் துலாம்பரமாகின்றன. கதையின் மர்ம நிகழ்ச்சிகளெல்லாம் புத்தகத்தின் மேலட்டையிலேயே வெளியாகி விடுகின்றன.

எழுதியவர்கள்:— ஆர். எஸ். மணி, சம்பத் குமார்; பிரசுரம்: ஞானமணிப் பிரசுரம், சென்னை 17; விலை: ரூ. 1—4—0.

## பவளமல்லிகை

"ஏன் மாமி, கண்ணன் புல்லாங்குழல் ஊதினால் புலியும் பசுவும் பக்கத்தில் பக்கத்திலே நின்று கேட்குமாமே! இந்தக் காலத்திலே மனிதர்களெல்லாம் அடித்துக்கொண்டு சாகிறார்களே, கண்ணன் இப்போது இந்த உலகத்திலே வந்து புல்லாங்குழல் ஊதினால் எல்லோரும் சாதுவாய்ப் போய்விட மாட்டார்களா!" என்று குழந்தைப் பெண் கேட்டாள். இந்தக் கேள்வியைக் கேட்கும் அளவுக்கு அவள் மனம் அடைந்திருந்த பரிபக்குவ நிலைதான் இந்தக் கதைக்கு அடிப்படையாக அமைந்திருக்கிறது. குழந்தை உள்ளத்தில் கனிந்திருந்த கண்ணன் பக்தி அந்த வீட்டுக்கார முதலியாரின் உள்ளத்தையும் அன்புமயமாக்கி விடுகிறது. அதுவரையில் கொடுமையுடனிருந்த அவர் சுபாவம் மிகவும் இரக்க முள்ளதாக மாறி விடுகிறது.

இதேமாதிரி "கூன் பாண்டியன்" "பாசம்", "யார் தெய்வம்!". "ஜோடி மரப்பாச்சி" "கதைக்குக் கால் உண்டு" முதலிய கதைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவையை நமக்கு எடுத்துக் கூறி மகிழ்வூட்டுகின்றன.

ஆசிரியர்: கி. வா. ஜகந்நாதன்; பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18. விலை: ரூ. 2—0—0.

## உபநிஷத் ஸாரம்

"உபநிஷதங்கள் அளவற்ற பலத்தைக் கொடுக்கும் சுரங்கங்களாக இருக்கின்றன. உலக முழுவதிற்கும் பலம் அளிக்கக்கூடிய சக்தி அவைகளில் இருக்கின்றன. அவைகளின் மூலம் உலக முழுவதிற்கும் புத்துயிரும் புது உணர்ச்சியும் புது சக்தியும் அளிக்க முடியும்" என்று விவேகானந்தர் கூறிப் போந்தார். அத்தகைய சக்திவாய்ந்த உபநிஷதங்களில் ஸாரமாயுள்ளதைத் தொகுத்து தமிழில் விசேஷ உரையும் எழுதியிருக்கிறார் ஸ்ரீ அண்ணா. உபநிஷத வாக்கியங்களின் மூலம் நாகர லிபியிலும் தமிழிலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பிரசுரம்: ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை. விலை: முதல் பாகம் 2—8—0; இரண்டாம் பாகம்: ரூ. 3—0—0.

## அத்வைத விளக்கம்

இந்நூலின் முதல் நான்கு பாகங்களில் பாகவதத்தை பக்தியோகமாகவும், மகாபாரதத்தைக் கர்மயோகமாகவும் விவரித்திருக்கிறார் இந்நூலாசிரியர். இந்நூலில் ராமாயணத்தை ஞானயோகமாக விளக்குகிறார். ஆத்மஞானமாகிய ராம பாணம் ராவணன் என்னும் அகங்காரத்தை அழித்தது; பிறகு ராமனாகிய ஞானயோகி அயோத்தியாகிய இருதயத்தில் சீதையாகிய சுத்த மாயையுடன் பிரவேசித்தான்; அப்போது அனுமானாகிய ஞான வைராக்கியம் அவனுடன் இருந்தது. இந்நிலையில் அவன் ஜீவன்முக்த நிலையை அடைந்தான் என்பது ராமாயண காவியத்தின் தத்துவார்த்த உள்ளுறை பொருள்.

இதே மாதிரி ராமாயண கதாபாத்திரங்கள் அனைவரும் இந்நூலில் வேதாந்த தத்துவரூபமாகக் காட்சி அளிக்கிறார்கள். ஆராய்ச்சி பூர்வமான இந்நூலை இயற்ற ஆசிரியர் உபநிடதங்களையும் புராணங்களையும் ஆதாரமாகக் காட்டியிருக்கிறார்.

ஆசிரியர்:—கே. கோபாலகிருஷ்ணய்யர், நெ. 27, தெற்குச் சித்திரை வீதி, மதுரை; விலை ரூ. 1.

திறமை மிக்க வேலைப்பாடு
வெகு நாள் மறையாது
திகழ்கிறது



திருச்சி மலைக்
கோட்டை
236 அடி உயரம்
கி.பி. 17-ம்
நூற்றாண்டில் நிர்மா
ணிக்கப்பட்டது

Stanes

'ஸ்டேன்ஸ்'
சிகப்பு லேபில்
சுத்தமான காப்பி



தி யுனைடெட்
காப்பி ஸப்ளை
கம்பெனி
லிமிடெட்

கோயம்புத்தூர்,
தென் இந்தியா



காக்கிநாடாவிற்கு ஏஜண்டு:
மிஸ்டர் கர்ணம் ஹனுமந்த ராவ்
மெர்ச்சென்ட்
திருமலை ராவ் தெரு, காந்தி நகர்.

விஜயவாடாவிற்கு ஏஜண்டு:
மிஸ்டர் S. Ch. மல்லப்ப ராஜு
மான்யுபாக்சரர்ஸ் ரெப்ரஸெண்டேட்டிவ்
பக்கிங்காம்பேட் போஸ்ட்




# ராஜாளி மடம்

கி.ரா. கோபாலன்

## 10 'உன் பேச்சு - உன் பார்வை...'

அந்த வீட்டிற்குப் பின் புறத்தில் ஒரு காலத்தில் அழகான தோட்டம் இருந்திருக்க வேண்டும். ஆனால் அங்கு இப்பொழுது இரண்டொரு செடிப் புதர்களும் நான்கைந்து மரங்களும்தானிருந்தன. நிலவு நன்கு பிரகாசித்துக் கொண்டிருந்தது.

பொன்னி அங்கு வந்து நான்கு புறமும் சுற்றிப் பார்த்தாள். மதில் சுவருக்குப் பக்கத்திலிருக்கும் வேப்ப மரத்தின்மேலிருந்து ஒரு மனிதன் இறங்கி அவளை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தான். பொன்னியும் அவனை எதிர்நோக்கி நடந்தாள். அவர்கள் இருவரும் நெருங்கிச் சந்தித்த பொழுது அந்த மனிதன், "பொன்னி..." என்று சற்று உரக்கவே கூப்பிட்டு விட்டான்.

பொன்னி 'உரத்துப் பேசாதே!' என்று எச்சரிக்கை செய்கிறவள் போல் கையால்

நிலவு நன்கு பிரகாசித்துக் கொண்டிருந்தது.

பொன்னி அங்கு வந்து நான்கு புறமும் சுற்றிப் பார்த்தாள். மதில் சுவருக்குப் பக்கத்திலிருக்கும் வேப்ப மரத்தின்மேலிருந்து ஒரு மனிதன் இறங்கி அவளை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தான். பொன்னியும் அவனை எதிர்நோக்கி நடந்தாள். அவர்கள் இருவரும் நெருங்கிச் சந்தித்த பொழுது அந்த மனிதன், "பொன்னி..." என்று சற்று உரக்கவே கூப்பிட்டு விட்டான்.

பொன்னி 'உரத்துப் பேசாதே!' என்று எச்சரிக்கை செய்கிறவள் போல் கையால்
வாயைப் பொத்திக் காட்டி விட்டு அவனை அழைத்துக்கொண்டு பக்கத்திலிருந்த மாட்டுக் கொட்டாரத்தின் நிழலுக்குப் போனாள். நிலவின் ஒளியிலிருந்து அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ள அந்த மாட்டுக் கொட்டகையின் நிழல் போதுமானதாக இருந்தது.

அவன் ஒரு வாலிபன். அவனுக்கு வயது கிட்டத்தட்ட முப்பது இருக்கலாம். கறுத்த உருவம் தான். இருந்தாலும் கல்லில் கடைந்தெடுத்தது போன்ற மேனி. விஷமம் நிறைந்த பார்வை. கட்டுக் குலையாத தேகம். கரு கரு வென்று நன்றாக முறுக்கி விடப்பட்ட சிறிய அரும்பு மீசை. "பொன்னி! நான் சீழ்க்கை யடித்ததைக் கேட்டுத்தானே வந்தாய்! இரவு முழுவதும் சீழ்க்கை யடித்துச் சீழ்க்கை யடித்து என் நாக்கு வறண்டு உலர்ந்து போய்விட்டதே! நீ நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாயோ!" என்று அவன் கேட்டான்.

"இல்லை, விழித்துக் கொண்டுதான் இருந்தேன். நீங்கள்தான் சீழ்க்கை அடிக்கிறீர்கள் என்பதும்

கிறேன், தெரியுமா! பொன்னி, என்ன இருந்தாலும் நீ என்னை இப்படித் தவிக்க விடக் கூடாது" என்றான் அவன் அலுப்போடு.

"உங்களை நான் என்ன தவிக்க விட்டு விட்டேன்! அதிருக்கட்டும். இந்த வேளையில் இங்கே நீங்கள் எங்கே வந்தீர்கள்!"

"நான் எங்கே வந்தேனா! இது உனக்கே அழகாக இருக்கிறதா, பொன்னி! உன்னை ஒரு நாள் பார்க்கா விட்டால் என் மனசு என்ன பாடு படும் என்று உனக்குத் தெரியாதா! அதிருக்கட்டும், பொன்னி! யாராவது இந்த மாதிரி வீட்டிலே வந்து வேலைக்கு இருப்பார்களா! நான் உன்னைப் பார்க்கிறதற்கு எவ்வளவு சிரமப்பட வேண்டியிருந்தது, தெரியுமா!" என்றான்.

"எல்லாம் ஒரு காரணத்துக்காகத்தான் இந்த

டேன்! அதிருக்கட்டும். இந்த வேளையில் இங்கே நீங்கள் எங்கே வந்தீர்கள்!"

"நான் எங்கே வந்தேனா! இது உனக்கே அழகாக இருக்கிறதா, பொன்னி! உன்னை ஒரு நாள் பார்க்கா விட்டால் என் மனசு என்ன பாடு படும் என்று உனக்குத் தெரியாதா! அதிருக்கட்டும், பொன்னி! யாராவது இந்த மாதிரி வீட்டிலே வந்து வேலைக்கு இருப்பார்களா! நான் உன்னைப் பார்க்கிறதற்கு எவ்வளவு சிரமப்பட வேண்டியிருந்தது, தெரியுமா!" என்றான்.

"எல்லாம் ஒரு காரணத்துக்காகத்தான் இந்த
வீட்டிலே வேலை ஒப்புக் கொண்டேன். நீங்கள் எதற்காக என்னைப் பார்ப்பதற்கு சிரமப்படணும்! நடு நிசியிலே வந்து இப்படி ஒரு பெரிய மதிலைத் தாண்டிக் குதித்து மரத்துமேலே ஏறி உட்கார்ந்து கொண்டு இதென்ன கஷ்டம்! என்னை இந்த வீடு விழுங்கி விடுமா! நான் என்றைக்காவது ஒரு நாள் வந்து உங்களை எல்லாம் பார்க்காமலே இருந்து விடப் போகிறேனா!" என்றாள் பொன்னி.

"நீ வருகிறவரையில் உன்னைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியுமா! நேற்று நான் உன்னைப் பார்க்கலாம் என்று உன் வீட்டுக்குப் போனேன். நீ இங்கே வேலைக்கு வந்திருக்கிறாய் என்று உன் தாயார் சொன்னாள். நான் அதை நம்பவே யில்லை. இந்த இடத்தில் வந்து வேலை ஒப்புக் கொள்ள உனக்கு எப்படி துணிச்சல் ஏற்பட்டது! பிசாசு மாதிரி இருக்கும் அந்த வேலைக்காரி ஒருத்தி போதுமே, உன்னை அடித்து விழுங்குவதற்கு!"

"அவள் என்னை அடித்து விழுங்குகிற வரையில் நான் பார்த்துக் கொண்டிருப்பேனா! அவளைச்

விட்டு நான் உயிர் வாழ்வதா! இதை நீதான் சொல்லுகிறாயா......!" என்று அவள் கைகளைப் பற்றிய வண்ணம் கேட்டான் அவன்.

"சரி, அத்தான்! என்னை நீங்கள் மறக்க வேண்டாம். சதா நினைத்துக் கொண்டே இருங்கள். அடிக்கடி இங்கே மாத்திரம் வராதீர்கள்" என்றாள் கண்டிப்பாகப் பொன்னி.

"ஏன்!"

"இந்த வீட்டிலே இருக்கிற இரண்டு ராட்சஸிகளின் ரகசியம் என்னவென்று தெரியணும். அதற்காகத்தான் எத்தனையோ கஷ்டங்களையெல்லாம் சகித்துக் கொண்டு இங்கே வேலை பார்க்க வந்திருக்கிறேன்!"

"அவர்கள் ரகசியம் எப்படியாவது அழிந்து மண்ணாகப் போகட்டும். அது தெரிந்தால் என்ன, தெரியா விட்டால் என்ன! நீ எதற்காக இந்தக் கருமம் பிடித்த வீட்டிலே வந்து வேலை செய்யணும்! சொந்த வீடு வாசல் இல்லையா! சோறு தண்ணீருக்கு வழி இல்லையா! நிலம் நீச்சு இல்லையா! நீ மாத்திரம் தானா கஷ்டப்படுகிறாய்! உன் அத்தானுடைய மனத்தையும் அல்லலா கோக வைக்கிறாய்! காலா காலத்திலே ஒரு கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு அத்தானோடு ஆனந்தமாக......" என்று சொல்லி மெதுவாகப் பொன்னியின் கன்னத்தைத் தட்டினான் அவன்.

"ஆரம்பித்து விட்டீர்களா உங்கள் கதைக்கு! நான் கல்யாணம் செய்து கொண்டு ஆனந்தமாக இருக்கிறதை மட்டும் நினைத்தால் போதுமா! என் வயதுக் கொத்த இன்னொரு பெண் இந்த வீட்டில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அவள் கஷ்டப்படுவதைப் பார்த்துக் கொண்டு நான் மட்டும் சுகித்திருக்க நான் அவ்வளவு கல் நெஞ்சக்காரி அல்ல. முதலில் வேதாவுக்கு ஒரு வழி செய்த பிறகுதான் நான் என் கல்யாணம் கார்த்திகை எல்லா வற்றைப் பற்றியும் கவலைப்பட முடியும்" என்றாள் பொன்னி பளிச்சென்று.

"வேதாவா......! அது யாரு! பெயரே புதிதாக இருக்கிறதே!"

"இந்த வீட்டிலே வீணாய் ஒரு பெண்ணை அடைத்துப் போட்டு இம்சிக்கிறார்கள். அவள் பெயர்தான் வேதா. அவளை எப்படியாவது இந்த எமன்கள் கையிலிருந்து மீட்கவேணும் என்றுதான் நான் இந்த வீட்டிலே வேலை செய்ய ஒப்புக் கொண்டேன்!" என்றாள் பொன்னி.

"சரியாய்ப் போச்சு! இந்த வீட்டிலே ஒரு பைத்தியம் பிடித்த பெண்ணு இருக்கிறாள் என்று சொல்லுவார்களே, அந்தப் பெண்ணு!"

"அந்தப் பெண்ணுக்கு ஒன்றும் பைத்தியமில்லை. அதெல்லாம் தெரியாதவர்கள் சொல்லுகிற கதை. நல்ல குணமான பெண். அவள் எவ்வளவு அழகாக இருக்கிறாள், தெரியுமா! அவளைப் போன்ற அழகான பெண்களை இந்த உலகத்திலே நான் பார்த்ததில்லை!"

"ஊஹூ ஊஹும். கிடக்கிறது, விடு! இதையெல்லாம் நான் நம்ப மாட்டேன். உன்னைவிட அழகு உள்ளவர்கள் இந்த உலகத்திலே வேறு யாராவது இருக்கிறார்களா!" என்றான் மருதப்பன்.

"இந்தாங்க, இப்படி யெல்லாம் சொல்லிக் கொண்டு திரியாதீர்கள். ஏற்கெனவேயே மாமன் மகள் மைபோட்டு மயக்கி விட்டாள் என்று ஊரிலே உள்ளவர்கள் என் மேலே இல்லாத பழியெல்லாம் சுமத்துகிறார்கள். நீங்களும் இப்படிப் பேச ஆரம்பித்து விட்டால் அப்புறம் வேறு வினையே வேண்டியதில்லை."

"உன் கிட்டே மயங்க நீ மை வேறு போடணுமா! கிடக்கிறார்கள், மூளை இல்லாதவர்கள்! உன் அருமை தெரியாமல் பேசுகிறார்கள்! எவன் அத்தை மகனாக இருக்கிறானோ, அவனுக்குத்தானே அந்த அருமை தெரியும்! உன் பேச்சு, உன் பார்வை, உன் சிரிப்பு, நடை, உடை, பாவனை இதெல்லாம் அவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது! அதெல்லாம் எனக்குத்தானே தெரியும்!" என்று சொல்லி மெதுவாக அவளை அணைத்துக் கொண்டான் மருதப்பன்.

பொன்னி வெட்கத்துடன் அவன் கைகளை அகற்றியவாறே, "அத்தான், நீங்கள் எனக்கு ஒரு உபகாரம் செய்ய வேணுமே!" என்றாள்.

"உனக்குச் செய்ய வேண்டிய உபகாரத்தையெல்லாம் நான் செய்யாமல் வேறு எந்தப் பயல் செய்வான்! உரிமைக்காரனை விட்டு விட்டு எந்தப் பயல் உனக்கு உபகாரம் செய்ய வந்தாலும் அவன் கழுத்தைத் திருகி விட மாட்டேனா! என்ன செய்ய வேணும், சொல்லு! இப்பொழுதே செய்கிறேன். இந்த வீட்டிலேயிருந்து அந்தப் பெண்ணை வெளியே கிளப்பிக் கொண்டு வரவேணுமா! இதோ தயார்! அந்த இரண்டு கிழவிகளையும் ஒரு தூணிலே வரிந்து கட்டிப் போட்டு விட்டு அந்த பெண்ணை அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்" என்றான் மருதப்பன் படபடப்போடு.

"பதட்டப் படாதேயுங்க. அப்படி யெல்லாம் செய்தால் காரியம் கெட்டுப் போய் விடும். நாளைக்கு ராத்திரி..."

"நாளைக்கு ராத்திரிதானே! சரியான நேரம் தான். நாளைக்குக் கூட நிலவு உண்டு!"

"சொல்லி முடிக்கிறதற்குள்ளே அவசரப்படுகிறீர்களே! சொல்லுவதைக் கொஞ்சம் பொறுமையாகத்தான் கேளுங்களேன்! நந்திதுர்க்கத்திலே இருக்கிறார், பாருங்கள், டாக்டர் பரசுராமன்! நாளைக்கு ராத்திரி அவர் வீட்டுக்குப் போய் 'நம் பாட்டிக்கு உடம்பு அதிகமாய் இருக்கிறது. உடனே வாருங்கள்' என்று சொல்லி அழைத்து வந்து நம் வீட்டிலே இருக்கச் சொல்லுங்கள். அப்புறம் நம் வீட்டுச் சின்ன வண்டியை ஓட்டிக் கொண்டு வந்து இங்கே வெளியே யிருக்கிற தோப்பிலே தயாராக இருங்கள்!"

"இதென்ன கதையாக இருக்கிறதே! வீட்டிலே தான் பாட்டி கருங்கல்லுக் கணக்காகக் குந்தி



தையற்காரன்:—என்னங்க, மூன்று மாதக் குழந்தைக்குத்தானே சட்டை தைக்க வேணுமென்றீர்கள்? அதற்கு என்னத்துக்கு இவ்வளவு துணி? இதில் பாதி போதுமே!

துணி கொடுத்தவர்:- அது சரிதான், அப்பா! ஆனால் நீ சட்டை தைத்துத் தரும்போது குழந்தைக்குச் சரியாயிருக்க வேண்டாமா? அதனால்தான் அதிகமாகவே துணி கொடுத்தேன்!




கிட்டு ஊர் வம்பெல்லாம் பேசிக்கொண்டிருக்கிறானே!'' என்றான் மருதப்பன்.

''அந்தக் கதையெல்லாம் அப்புறம் சொல்லுகிறேன். நீங்கள் முதலில் நான் சொன்னதைச் செய்தால் போதும்.''

''சரி! கடையிலே ஏமாற்றி அழைத்துக் கொண்டு வந்தேன் என்று டாக்டர் ஐயா என்னைத் தான் திட்டப் போகிறாரு!''

''அதெல்லாம் திட்டமாட்டாரு. சந்தோஷப் படுவாரு!''

''அது கிடக்கட்டும். எதுக்காக அந்த டாக்டர் ஐயாவைப் போய் சொல்லி அழைத்துக் கொண்டு வரவேணும்!''

''இந்த வீட்டிலே வேதா என்று ஒரு பெண் இருக்கிறாள் என்று சொன்னேன், பாருங்கள்! அவளை சந்திக்கிறதற்காக!''

''அவளை எதற்காக அவர் சந்திக்கணும்!''

''நீங்கள் ஏன் உங்கள் மாமன் மகளைச் சந்திக்க வேண்டும் என்று இந்த கடுசியிலே சுவர் ஏறிக் குதித்து வந்து வேப்ப மரத்திலே குந்தியிருந்தீர்கள்! அதைப் போலவேதான் அவரும் அவளைச் சந்திக்கணும்'' என்றான் பொன்னி

''ஓஹோ! அப்படியா விஷயம்! விளங்கிப் போச்சு. இந்தப் பெண் அந்த டாக்டருக்கு மாமன் மகளா! சொந்த மாமன் மகளாக இருக்கும் போது ஏன் உரிமையோடு அவரே இந்த வீட்டுக்கே நேரே வந்து அவளைச் சந்திக்கக் கூடாது! இந்தத் திருட்டு வழியெல்லாம் எதற்கு!''

''திருட்டு வழிதான். நேர்வழி போகிறவர்களுக்கு நேர் வழி போகணும், கோணல் வழி போகிறவர்களுக்குக் கோணல் வழிதானே போகணும்!''

''சரிதான், சரிதான்! அதுவும் உண்மைதான். நீ கவலைப்படாதே! இனி மேல் நான் பார்த்துக் கொள்கிறேன். நான் எல்லா ஏற்பாட்டையும் செய்து விட்டு நாளைக்கு ராத்திரி பத்து மணிக்கு மேலே வண்டியைக் கட்டிக் கொண்டு வந்து தோப்பிலே காத்திருப்பேன், ஏமாற்றிவிடாதே! கட்டாயம் வந்து விடு.''

''நிச்சயம் அவளை அழைத்துக் கொண்டு வந்து விடுவேன். நீங்கள் மாத்திரம் வண்டியிலே நல்ல மாடாகக் கட்டிக் கொண்டு வாருங்கள். குருவிக் குளத்துக்குப் போய் விட்டு வெள்ளி முளைக்கிறதுக்கு முன்னாலே இங்கே திரும்பி வந்து விடணும்.''

"அதைப் பற்றிக் கவலைப்படாதே, பொன்னி! மூன்று கல்லுத்தானே! நம் சுவரந்தான் காலை கலைக் கட்டிக் கொண்டு வருகிறேன். 'சூ' என்றால் போதும்; சிட்டாய்ப் பறந்து போகும்."

"சரி, நாழிகை யாகிவிட்டது. நான் போகணும்" என்று பொன்னி அவனிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வீட்டிற்குள்ளிருந்து யாரோ வருவதுபோல் சப்தம் கேட்டது.

"அந்த வேலைக்காரி சனியன் பிடித்தவள் எழுந்து விட்டாள் போலிருக்கிறது. நீங்கள் ஒளிந்து மறைந்து ஒருவர் கண்ணிலும் படாமல் இங்கிருந்து போய்விடுங்கள். நானும் போகிறேன்" என்று பொன்னி அவன் கைப் பிடியை உதறிக் கொண்டு நடந்தாள். அவள் பின்புற வாசற் படிக்கு வந்த போது வேலைக்காரி செங்கம்மா கையில் ஒரு விளக்குடன் அவளை எதிர்நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

*

செங்கம்மாவைக் கண்டதும் பொன்னி திகைப்படைந்து நின்றாள் என்றால் அது இயற்கை. ஆனால் பொன்னி தன் சாகஸத்தால் தனக்கு ஏற்பட்டுள்ள திகைப்பையும் பயத்தையும் மறைத்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்தாள்.

பனிக்குக் கோழிபோல் இருந்த செங்கம்மாவின் கண்களில் சம்சயமும் சந்தேகமும் நிறைந்திருந்தன. அவள் வாய்திறந்து பேசுவதற்கு முன்னால் அவளுடைய கொடூரமான விழிகளே கேள்விகள் கேட்பது போலிருந்தன. பொன்னி சிறிது நேரம் தயங்கி நின்றுவிட்டு வியப்போடும் விஷமச் சிரிப்போடும், "என்ன, இப்படிப் பார்க்கிறீங்க!" என்று கேட்டாள்.

"என்னை நீ சிரித்து மழுப்பி ஏமாற்றிவிட முடியாது. இந்த வேளையிலே உனக்கு கொல்லைப் புறத்தில் என்ன வேலை!" என்று செங்கம்மா அதிகாரத் தொனியுடன் கேட்டாள்.



"இரண்டு நாளைக்கு முன்னாலே உங்களை யாரோ காலிப் பயல் வழி மறித்து, கையிலிருந்த ஐந்து ரூபாயைப் பிடுங்கிக் கொண்டு போய் விட்டானாமே! நீங்களும் வாயைத் திறக்காமலே வந்து விட்டீர்களாமே!"

"ஆமாம். நான் வாயைத் திறந்திருந்தேனானால் எட்டுத் தங்கப் பல்லையும் தட்டிக் கொண்டு போயிருப்பானே, படுபாவி...!"

"என்னமோ சப்தம் கேட்டது, கொல்லைப் புறத்திலிருந்து. என்னவென்று போய்ப் பார்த்தேன். ஒருவேளை யாரேனும் கொள்ளைக் காரர்கள்......"

"கொள்ளைக்காரர்களா......! எவனும் இந்த வீட்டுக்குள் நுழையமாட்டான்... இத்தனை நாளும் இல்லாத திருடன் இப்பொழுதுதான் இந்த வீட்டுக்கு வரப்போகிறானோ! நீசொல்லுவது வேடிக்கையாக இருக்கிறதே!" என்றாள் செங்கம்மா.

"இத்தனை நாளும் இந்த வீட்டுக்குத் திருடன் வராமலிருந்தால் இப்போதும் வரமாட்டான் என்று ஏதாவது சாஸ்திரமோ! கொள்ளை யடிக்கிறவர்கள், நினைத்தால் எந்த வீட்டுக்கு வேண்டுமானாலும் வருவார்கள். ஆனால் நீங்கள் இருக்கிற இடத்துக்கு எப்படிப்பட்ட கொள்ளைக்காரனும் துணிச்சலாக வரமாட்டான்தான்"—கிண்டலாகச் சிரித்துக் கொண்டே சொல்லிய பொன்னியின் வார்த்தையும் சிரிப்பும் செங்கம்மாவை ஒரு விதத்தில் பரிகாசம் செய்வதுபோலிருந்தாலும் ஒரு வகையில் பெருமைப் படுத்தியும் அபிமானம் வைத்துப் பேசுவதுபோலும் இருந்தன. உண்மையில் செங்கம்மாவிற்கே பொன்னி தன்னைப் பரிகாசம் செய்கிறாளா அல்லது உயர்த்தி வைத்துப் பேசுகிறாளா என்று புரியாமலிருந்தது. ஆகவே, அவள் தன் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளும் முறையில், "நீ என்னைப் பரிகாசம் செய்கிறாயா! இல்லை, நிஜமாகவே......" என்று ஆரம்பித்தாள்.

"அட கடவுளே! நான் பரிகாசமா செய்கிறேன், உள்ளதைத்தானே சொன்னேன்! நீங்கள் மட்டும் இந்த வீட்டைக் கட்டிக் காத்துக் கொண்டிருக்காவிட்டால் சுற்று வட்டத்திலே இருக்கிற கொள்ளைக்காரர்கள் இத்தனை நாள் இந்த வீட்டைச் சூறையாடிச் சென்றிருக்க மாட்டார்களா! உங்கள் பெயரைச் சொன்னால் வில்லாதி வில்லன் என்று சொல்லிக் கொள்ளும் ஆண் பிள்ளைகள் கூடக் கொஞ்சம் அடங்கித்தான் பேசுகிறார்கள்." என்றாள் பொன்னி.

பொன்னியின் புகழ்ச்சியான இவ்வார்த்தைகள் செங்கம்மாவின் மனதிற்குச் சிறிது குறு குறுப்பை ஏற்படுத்தின. அந்தப் பெருமையில் அவள் சிறிது நேரம் எல்லாவற்றையுமே மறந்து விட்டாள் என்றுதான் சொல்ல வேண்டும். "ஹாம்; இப்பொழுதாவது என்னைப் பற்றிச் சரியாகத் தெரிந்து கொண்டாயே! ஆமாம்! நான் மட்டும் இந்த வீட்டில் இல்லாவிட்டால் இங்கே தனியாக எஜமானியம்மாளால் ஒரு விநாடி இருக்க முடியுமா! நான் இருக்கிற வரையிலும் இந்த வீட்டை ஒருவர் கூடத் தைரியமாக நெருங்கிப் பார்க்க முடியாது. எந்த ஆண்பிள்ளைக்கும் என்னிடம் கொஞ்சம் பயம்தான். நாம் பெண் பிள்ளை தானே என்று கொஞ்சம் அடக்கமாகவோ பயத்தோடோ இருந்து விட்டால் பட்டப்பகல் வேளையிலே கூடக் கொள்ளையடித்துக் கொண்டு போய்விடுவார்கள்" என்றாள் பெருமையோடும் கர்வத்தோடும்.

பொன்னி மெதுவாக வீட்டிற்கு உள் புறமாக நடந்து கொண்டே, "ஆமாம்! அப்படித்தானிருக்கணும். நானும் பயப்பட மாட்டேன். இருந்தாலும் என்னமோ மனசு கேட்கவில்லை. ஆகவே, சந்தேகப் பட்டுக் கொல்லைப்புறம் போய்ப் பார்த்தேன். கடைசியிலே ஒன்றுமில்லை. கொட்டகையிலே கட்டியிருக்கிற மாடு மிரண்டிருக்கிறது அவ்வளவுதான்." என்றாள். (தொடரும்)




# 7 o'clock

## ஸெவன் ஓ'கிளாக் பிளேடுகள்



# வண்டிக்கார வடிவேலு

பி. எஸ். மணி

திருநெல்வேலி ஜங்ஷன் ரயில்வே நிலையம் வெறிச்சென்றிருந்தது. எல்லா ரயில்களும் வந்து போய் விட்டதால் ஒன்றிரண்டு பேரைத் தவிர ஸ்டேஷனில் யாரையும் காணோம். வேலையில்லாததால் போர்ட்டர்கள் தூணில் சாய்ந்தபடி தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். ஸ்டேஷனுக்கு வெளியே இரண்டே இரண்டு குதிரை வண்டிகள் மட்டும் நின்று கொண்டிருந்தன. சவாரி அச்சமயம் கிடைக்காததால் குதிரை வண்டிக்காரர்கள் இருவரும் பக்கத்திலிருந்த மரத்து நிழலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன தம்பி! எத்தனை நாள் இப்படிக் கிழட்டுக் குதிரையைக் கட்டிக் கொண்டு அழப் போறே! அதை ஒழித்துத் தலை முழுகிவிட்டு வேறு புதிசா ஒண்ணு வாங்கு, தம்பி!" என்று உபதேசித்தான் வயதான குதிரை வண்டிக்காரன் இளையவனான வடிவேலு என்ற வாலிபனை நோக்கி.

"மருதமுத்து அண்ணே! இந்தக் குதிரையை விற்க எனக்கு மனசில்லே. எங்க அப்பாரு காலத்திலேயிருந்து இது எங்கள் குடும்பத்துக்கு ஓடாக உழைச்சிருக்கு. அதை மறந்து இதைத் தள்ளி விட்டால் நியாயமாகுமா!" என்றான் வடிவேலு.

"அட! பெரிய வேதாந்தி போலப் பேசுகிறாயே! பாரு! உன் கிழட்டுக் குதிரையினாலே உன் நல்ல வண்டியிலே யாரும் ஏறப் பயப்படறாங்க. பாதி நாள் உனக்கு வாடகையே கிடைக்காமல் போய் விடுகிறதல்லவா!" என்றான் மருதமுத்து.

"அண்ணே! வாடகை வந்தாலும் சரி, வரா விட்டாலும் சரி, நான் கவலைப் படப் போகிறதில்லே. எனக்கு இருக்கிற சொத்து எனக்கும் என் குதிரைக்கும் ஆயுசு முழுதும் காணும். ஏதோ வீட்டிலேயே குந்திக்கிட்டு இருக்கக் கூடாதே என்பதற்காக வண்டியை ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓட்டிக் கொண்டு வருகிறேன். வந்த வாடகை போதும்" என்று தன் அபிப்பிராயத்தை விளக்கமாகக் கூறினான் வண்டிக்கார வடிவேலு.

வடிவேலு உழைத்துச் சாப்பிட வேண்டும் என்ற கோஷ்டியைச் சேர்ந்தவனல்ல. சின்னஞ் சிறு வயதிலேயே தன் தாயை இழந்து விட்டான். அவன் தகப்பனார் இந்த உலகை விட்டுப் பிரிந்து சென்ற பொழுது அவனுக்கு ஒரு பெரிய வீடும் சாப்பாட்டுக்கு வேண்டிய நிலமும், குதிரை வண்டியும் வைத்து விட்டுப் போனார். அவனுக்கு உறவு முறையில் அத்தை ஒருத்தி மட்டும் மூன்று மைல் தூரத்திலுள்ள கிராமத்தில் இருந்தாள். அவள் அடிக்கடி தன்னைத் தனியாக நின்ற வடிவேலுவுக்கு ஆறுதல் கூற வருவாள். வடிவேலுவும் அடிக்கடி தன் குதிரை வண்டியைப் பூட்டிச் சென்று அவளைப் பார்த்து விட்டு வருவான். மற்றபடி தன்னந்தனியனாக நின்ற வடிவேலுவுக்கு உறு துணையாக நின்றது அந்தக் கிழட்டுக் குதிரைதான். அந்தக் குதிரை கிழட்டுக் குதிரையாக இருந்த போதிலும் அதை வெறுக்காமல் அன்புடன் பராமரித்து வந்தான் வடிவேலு. அந்தக் குதிரையும் அவனிடம் மிகுந்த விசுவாசத்துடனிருந்து வந்தது.

அன்று வடிவேலு மிகுந்த மகிழ்ச்சியுடன் காணப்பட்டான். அதற்குக் காரணம் அவனுடைய அத்தை மரகதமும், அவள் பெண் பார்வதியும் அன்றைக்கு வருவதாகச் சொல்லியிருந்தது தான்.

சொன்னபடி அத்தை மரகதமும் பார்வதியும் வந்து விடவே வடிவேலுவுக்கு ஆனந்தம் நிலை கொள்ளவில்லை. அவர்களிருவரையும் நகரைச் சுற்றிக் காட்டுவதாகக் கூறி அழைத்தான். எல்லாம் அவனுடைய குதிரை வண்டியிலே ஏற்றிச் சென்றுதான். அந்த வண்டியிலே பூட்டியுள்ள கிழட்டுக் குதிரையைப் பார்த்ததும் அந்த வண்டியில் ஏறுவதற்கு மரகதமும், பார்வதியும் தயங்கினார்கள். ஆனால் வடிவேலு, "அத்தை! பயப்படாதீங்க. நம்ம குதிரை எப்படிப்பட்டது, தெரியுமா! இது ஓடுகிற மாதிரி இந்த ஊரிலே வேறு எந்தக் குதிரையும் ஓடாது. எல்லாக் குதிரைகளும் இதனிடம் பிச்சை வாங்க வேண்டும். வாருங்க. ஏறிக் கொள்ளுங்க" என்றான்.

நகரத்திலுள்ள எல்லா இடங்களுக்கும் அவர்களை அழைத்துச் சென்று காட்டினான் அவன். பார்வதி பட்டணத்தின் அழகிய காட்சிகளைக் கண்டு திகைத்துப் போய்விட்டாள். அதோடு வடிவேலுவின் வீட்டில் அவன் ஏற்பாடு செய்திருந்த விருந்தையும் கண்டு அவள் வியப்படைந்தாள். அதற்குக் காரணம் அவளிடம் அவன் தன் மனத்தைப் பறிகொடுத்து விட்டதுதான் என்பது பார்வதிக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லையல்லவா

அன்று மத்தியானம் சாவகாசமாகச் சாப்பிட்டு விட்டு உட்கார்ந்திருந்தாள் மரகதம். அவள் பக்கத்தில் உட்கார்ந்து ஊர் வம்பு பேசிக்கொண் டிருந்தான் வடிவேலு. பார்வதி வெட்கத்தினால் பக்கத்திலுள்ள அறைக் கதவின் இடுக்கின் வழியாக அவர்கள் பேசிக் கொண்டிப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

வடிவேலு தன் அத்தையிடம் சமயம் பார்த்துப் பேச்சோடு பேச்சாக, பார்வதியின் மேல் தான் கொண்டுள்ள காதலைக் குறிப்பாகத் தெரிவித்தான்.

"அத்தை! நீங்கள் எப்பொழுதும் இங்கே யிருந்து வீட்டைக் கவனித்துக்கொண்டால் அப்புறம் எனக்குக் கவலையில்லை" என்றான்.

"என்ன தம்பி! நான் இங்கேயே யிருந்துவிட்டால் அங்கே ஊரிலே யாரு வீட்டைக் கவனித்துக் கொள்வார்கள்!" என்று கேட்டாள் மரகதம்.

"என்ன அத்தை! பார்வதிக்கும் எனக்கும் கல்யாணமாகி விட்டால் நீங்கள் இங்கு வந்து இருக்க மாட்டீர்களா!" என்று வெளிப்படையாகக் கூறினான் வடிவேலு சிரித்துக் கொண்டே.

"தம்பி! பார்வதியின் கல்யாணத்தை அப்படி இலேசாகத் தீர்மானிக்க முடியாது போலிருக்கிறதே! உன்னைப் போல முறைப் பையன் இன்னொருவன் இருக்கிறானே! எங்கள் வீட்டுக்காரருக்கும்..." என்று ஏதோ சொல்ல வந்தவள் பாதியில் நிறுத்தி விட்டாள் மரகதம்.

"என்ன அத்தை! பார்வதிக்கு என்னைக் கட்டிக் கொள்ள இஷ்டமிருந்தால்...!" என்று கேட்டுக் கொண்டே பார்வதி நின்ற கதவின் பக்கம் திரும்பினான் வடிவேலு. ஆனால் என்ன துரதிர்ஷ்டம்! பார்வதி முகத்தைச் சிணுங்கிக் கொண்டு விட்டாளே! அதைப் பார்த்ததும் அவன் உள்ளம் மிகுந்த வேதனை அடைந்தது. 'என்னைக் கட்டிக் கொள்ள அவளுக்கு இஷ்டமில்லையோ! என் மீது ஆசையிருந்தால் அந்த இடத்திலேயே அவளுடன் நின்று கொண்டிருக்க மாட்டாளா! அந்த இடத்தை விட்டே அவள் ஓடிப்போய் விட்டாளே! ஒரு வேளை என்னைப் பிடிக்கவில்லையோ!' —இது போன்ற சிந்தனைகள் வடிவேலுவின் மனத்தில் அலைபாய்ந்தோடி அவனைத் திக்கு முக்காடச் செய்து விட்டன. தோல்வியினால் அவன் முகம் வாட்ட மடைந்தது. அதற்கு மேல் அவன் பேச்சைத் தொடர விரும்பவில்லை. ஆகவே அந்த இடத்திலேயே நிற்கப் பிடிக்காதவனாய் எழுந்து போய் விட்டான்.

வடிவேலுவின் அத்தை மரகதமும், பார்வதியும் அவன் வீட்டில் ஒரு வார விருந்து விட்டுப் போய் விட்டார்கள். போகும் பொழுது பார்வதி அவன் மனத்தில் பெரும் புயலைக் கிளப்பி விட்டுப் போய் விட்டாள். அவனது மனத்தில் எழுந்த காதல் தீ திடீரென்று சுடர் விட்டுப் பிரகாசிப்பது போலிருந்து பட்டென்று அவிந்து போய் விட்டதைக் கண்டதும் அவன் மனம் தீராத வேதனையை யனுபவித்தது.

அன்றைக்கு என்னவோ அவன் உள்ளம் நிலை கொள்ளாமல் தவித்தது. வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. குதிரை வண்டியைப் பூட்டிக் கொண்டு ஸ்டேஷனுக்குச் சென்றான்.

வழி நெடுக அவன் மனம் பார்வதியைப் பற்றிய சிந்தனையிலேயே லயித்திருந்தது. அவன் பார்வதியின் மீது எவ்வளவு ஆசையும் அன்பும் கொண்டிருந்தான்! அதையெல்லாம் அவள் ஒரு நிமிஷத்தில் பகற் கனவாகச் செய்து விட்டாளே! அவன் கட்டிய ஆகாசக் கோட்டைகளையெல்லாம் தகர்த்தெறிந்து விட்டாளே!

ஐயோ! இது என்ன! வடிவேலு பலத்த சிந்தனையில் ஈடுபட்டிருந்ததில் வண்டி பள்ளத்தில் இறங்குவதையும் கவனிக்க வில்லையே! இது என்ன பயங்கரம்! வண்டி கட கட வென்று பள்ளத்தில் உருண்டோடி விட்டதே! வண்டி ஒரு தடவை குடை ராட்டினம்போல் சுழன்றது. குதிரையும் வடிவேலுவும் அந்தச் சுழலில் சிக்குண்டு திணறினார்கள். குதிரைக்குப் பலத்த காய மேற்பட்ட பொழுதிலும் அது உருண்டு புரண்டு எழுந்து வண்டியிலிருந்து விடுவித்துக் கொண்டு மூர்ச்சையுற்றுக் கிடந்த வடிவேலுவின் அருகே சோகமாக நின்று கண்ணீர் வடித்தது.

சிறிது நேரம் அப்படியே அக்குதிரை திகைத்து நின்றுவிட்டுத் தன் காயங்களையும், உடம்பிலிருந்து ரத்தம் வழிவதையும் பொருட்படுத்தாமல் தலை தெறிக்க ஓட ஆரம்பித்தது. ஆபத்துச் சமயத்தில் தன் எசமானனை எப்படியாவது காப்பாற்றி விட வேண்டும் என்ற எண்ணந்தான் அதை அவ்வாறு ஓடச் செய்ததோ என்னவோ!

ரயில்வே ஸ்டேஷனில் சவாரிக்காகக் காத்துக் கொண்டிருந்த மருதமுத்து வடிவேலுவின் குதிரை மட்டும் பலத்த காயங்களோடு ஓடி வருவதைக் கண்டு திகைப்படைந்தான்.

தலை தெறிக்க ஓடிவந்த அக்குதிரை வடிவேலுவின் நண்பனான மருதமுத்துவின் அருகில் வந்து நின்றது. அதன் கண்களிலிருந்து நீர் பெருகுவதையும் உடம்பிலிருந்து இரத்தம் ஆறாகப் பெருகி வழிவதையும் கண்ட மருதமுத்து தன் நண்பனுக்கு ஏதோ விபரீதம் நேர்ந்து விட்டது என்று கருதித் தன் வண்டியிலேறிக் குதிரையை விரைவாகச் செலுத்தினான். வடிவேலுவின் குதிரை அந்த வண்டிக்கு முன்னால் ஓடி அவனுக்கு வழி காட்டிச் சென்றது.

வடிவேலு விழுந்த இடத்துக்கு மருதமுத்து வந்து சேர்ந்ததும் அங்கு கண்ட காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது. வடிவேலு அலங்கோலமாகப் பள்ளத்தில் விழுந்து கிடந்தான். அவன் வண்டி அதல பாதாளத்தில் உருண்டோடிச் சுக்கு நூறாக உடைந்து கிடந்தது.




மருதமுத்து க்ஷண நேரம் பிரமித்து நின்று விட்டுப் பின் வடிவேலுவின் அருகில் சென்று பார்த்தான். மூர்ச்சையாகிக் கிடந்த வடிவேலுவைத் தூக்கி தன் வண்டியில் போட்டுக்கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்தான்.

வண்டியில் கிடந்த வடிவேலு சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்து வேதனை தாங்காமல் கதறிக் கொண்டிருந்தான். மருதமுத்துவின் வண்டியைப் பின்பற்றி வடிவேலுவின் குதிரையும் ஓடிவந்து கொண்டிருந்தது.

மருதமுத்து உரத்த குரலில், "தம்பி! நல்ல காலம்! உனக்கு ஆயுசு கெட்டியாக யிருந்ததாலே பிழைத்தாய். அன்றே நான் இந்தக் கிழட்டுக் குதிரையை ஒழித்துக் கட்டு என்று சொன்னேனே. பார்த்தாயா! உன்னைப் படுகுழியில் தள்ளி விட்டதே!" என்றான் பரிதாபத்தோடு.

வடிவேலு முக்கி முனகிக் கொண்டே ஈனக் குரலில், "இல்லை, அண்ணே! என் அத்தை மகள் வந்ததிலே அதை ஒரு வாரமாகக் கவனிக்கவே யில்லை. அது குடிக்கத் தண்ணீரில்லாமல் வாடி யிருக்கு. அதுதவிர என் அத்தை மகள் பார்வதிக்கு என்னைப் பிடிக்கவில்லை என்று அறிந்ததும் என் மனம் மிகுந்த குழப்பமடைந்து விட்டது. அந்த நிலையிலே வண்டியைப் பூட்டிக் கொண்டு போனால் அது என் தவறுதானே! வீணாக அந்த வாயில்லாப் பிராணியின்மீது குறை சொல்லி என்ன பிரயோசனம்!" என்று கூறினான்.

வண்டி நாலு ரஸ்தாக்கள் சந்திக்கும் இடத்திற்கு வந்து திரும்பி ஆஸ்பத்திரி இருக்கும் சாலையில் ஓடத் தொடங்கியது. இவ்வளவு நேரமும் மருதமுத்துவின் வண்டியைப் பின்பற்றி வந்து கொண்டிருந்த அந்தக் கிழட்டுக் குதிரை என்ன நினைத்துக் கொண்டதோ என்னவோ! மருதமுத்துவின் வண்டி போன திசையில் போகாமல் அதற்கு எதிர்த்த திசையிலுள்ள ரஸ்தாவில் தலைதெறிக்க ஓடத் தொடங்கியது.

வடிவேலுவின் குதிரை எங்கேயோ வேறு திசையில் ஓடுவதைக் கண்டதும் மருதமுத்து "பாரு, தம்பி! உன் குதிரை உன்னிடம் ரொம்பப் பிரியமாயிருக்கிறது என்று சொன்னாயே! அது எங்கேயோ கட்டுமீறிப் போகிறதைப் பாரு. போகட்டும்! இத்தோடு அந்தச் சனியன் ஒழிந்துவிட்டால் சரி. நானூறு ரூபாய் பெறுமானமுள்ள நல்ல வண்டியைச் சுக்கு நூறாக்கிவிட்டது!" என்று எரிச்சலோடு கூறினான்.

வடிவேலுவினால் பதிலே பேச முடியவில்லை. சிரமப்பட்டு எழுந்து தன் குதிரை போன திசையை ஒரு தடவை நோக்கினான் அவன். அவன் கண்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர் உதிர்ந்தது.

வடிவேலு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான். அவனை டாக்டர்கள் வந்து பரிசோதித்து அவனுக்கு மருந்து வைத்துக் கட்டிவிட்டுச் சென்றார்கள். மருதமுத்து கூடவேயிருந்து தன் நண்பனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தான். இவ்வளவு தேக உபாதைகளுக்கும் மத்தியில் வடிவேலுவுக்குத் தன் அருமைக் குதிரையின் நினைவு மறக்க வில்லை. இரவு கண் அயர்ந்திருக்கும் பொழுதும், பகலில் விழித்துக் கொண்டிருக்கும் பொழுதும், பித்தனைப் போல, 'என் குதிரையின் கதி என்னவாயிற்றோ! என் குதிரை போனபின் நான் இருந்து என்ன பிரயோசனம்! அத்தை மகள் பார்வதிதான் ஏமாற்றினாள் என்றால் என் அருமைக் குதிரையுமா என்னை ஏமாற்ற வேண்டும்!' என்று பிரலாபிக்கத் தொடங்கி விட்டான். வெட்ட வெளியை வெறித்து வடிவேலு இப்படிப் பிதற்றுவதைக் கண்ட மருதமுத்துவுக்கு, 'இந்தப் பிள்ளை தன் குதிரையின் நினைவிலேயே உயிரை விட்டு விடுமோ!' என்ற பயம் உண்டாகி விட்டது. "தம்பி, வடிவேலு! நான் எப்படியாவது குதிரையைக் கண்டு பிடித்து விடுகிறேன்" என்று ஆறுதல்கூறினான் மருதமுத்து.

ஆஸ்பத்திரியிலிருந்து இரண்டே நாளில் வடிவேலு வீடு திரும்பினான். கால்களில் உள்ள கட்டுகள் மட்டும் இன்னும் அவிழ்க்கப்படவில்லை. தினம் ஒரு தடவை ஆஸ்பத்திரிக்கு வந்து மருந்து போட்டுக்கொண்டு போகும்படி மட்டும் கூறி விட்டார் டாக்டர்.

வடிவேலு அன்று காலையில் தனிமை வேதனையை யனுபவித்தவாறு படுக்கையில் சாய்ந்து கொண்டிருந்தான். வீட்டினுள் யாரோ தடதடவென்று வரும் சத்தம் கேட்டது. அவனுடைய அத்தை மரகதமும், அவளுக்குப் பின்னால் பார்வதியும் வந்து கொண்டிருந்தார்கள். வடிவேலுவுக்கு அவர்களைப் பார்க்கவே மனம் வரவில்லை. தன் முகத்தைக் கவிழ்ந்து கொண்டான் அவன்.

மரகதம் வடிவேலுவின் அருகில் வந்து, "தம்பி! உன்னை உசிரோடு பார்க்க எனக்குக் கொடுத்து வைத்ததே! உன் குதிரை நேற்று முந்தின நாள் இரவு தலைதெறிக்க ஓடி வந்தது. அதன் மேலே யெல்லாம் ஒரே காயம். அதைப் பார்த்ததும் பார்வதியும் நானும் பயந்து விட்டோம். உனக்கு ஏதோ விபரீதம் நேர்ந்து விட்டது என்று தெரிந்தது. உடனே புறப்பட்டு வர வேண்டும் என்று நினைத்திருக்கும் போதுதான் மற்றொரு பேரிடி என் தலையில் விழுந்துவிட்டது. எங்க வீட்டுக்காரர் வயல் வரப்பைச் சுற்றி வரும் பொழுது தலை சுற்றிக் கீழே விழுந்துவிட்டாரு. அவரைக் கவனிக்க வேண்டி வந்ததால்..." என்று கூறிக்கொண்டே போனாள்.

வடிவேலு நடுவே இடை மறித்து, "அது இருக்கட்டும், அத்தை! என் குதிரை சௌக்கியமாயிருக்கிறதா! அது இப்பொழுது எங்கே யிருக்கிறது!" என்று கேட்டான்.

"தம்பி! கவலைப்படாதே! பார்வதி அதைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து அதன் காயத்

துக்கெல்லாம் மருந்து போட்டான். அதன் காயங்களெல்லாம் இப்போது குணமாகி விட்டன. அதையும் அழைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறோம். இப்போது அந்தக் குதிரை மேலே பார்வதிக்கு எவ்வளவு ஆசை தெரியுமா!''

வடிவேலுவின் முகத்திலுள்ள கவலை சிறிது நீங்கியது. அவன் வியப்புக் குரலில், ''அப்படியா!'' என்று கேட்டான்.

''இன்னும் ஒரு சந்தோஷமான செய்தியைக் கேள், தம்பி! பார்வதி உன்னையே கல்யாணம் கட்டிக்கப்போகிறேன் என்று பிடிவாதம் பிடித்து என் வீட்டுக்காரரின் சம்மதத்தையும் பெற்று விட்டாள். எனக்கும், நீங்கள் இரண்டு பேரும்...'' என்று மரகதம் கூறி முடிப்பதற்குள்ளேயே, வடிவேலு ''என்ன அத்தை! நிசமாகத்தானா!'' என்று கேட்டு விட்டு ஒரு தடவை இருந்த இடத்திலிருந்து துள்ளிக் குதித்தான் தன் காயக் கட்டுக்களையும் வலியையும் மறந்து.

*   *   *

ஒரு மாதம் கழிந்தது. வடிவேலு பூரண குணமடைந்து விட்டான். பார்வதி அப்பொழுது அவனுடைய அத்தை மகள் அல்ல; மனைவி.

வடிவேலு தன் அன்புக் குதிரையை அன்புடன் தடவி விட்டுக் கொண்டிருந்தான். பார்வதி குதிரைக்கு உணவு வைத்துக் கொண்டிருந்தாள்.

திடீரென்று வடிவேலு பார்வதியின் பக்கம் திரும்பி, ''ஆமாம், பார்வதி! உன்னை

நாளாக ஒரு கேள்வி கேட்க வேணும் என்று ஆசை. என்னை உள்ளன்புடன் நேசித்துத்தான் கல்யாணம் கட்டிக் கொண்டாயா! இல்லை......''

''ஏன், உங்களுக்கு அந்தச் சந்தேகம் பிறந்தது! நான் உங்களை ஆசைப்பட்டுத்தான்......''

''அப்படியானால் நான் 'பார்வதிக்கு இஷ்டமிருந்தால் சரிதானே' என்று அத்தையிடம் கேட்டபொழுது நீ ஏன் முகத்தைச் சிணுங்கிக் கொண்டாய்! என்னைப் பிடிக்கவில்லை என்ற காரணத்தினால்தானே!''

''இல்லை! என் அம்மா இன்னொரு முறைப் பையனுமிருக்கிறான் என்று சொன்னது எனக்குப் பிடிக்கவில்லை. அதற்காகத்தான் என் முகத்தைச் சிணுங்கிக் கொண்டேன். நீங்கள் தவறாக நினைத்து விட்டீர்களோ!'' என்றாள் பார்வதி.

அச்சமயத்தில் மருதமுத்துவின் குரல் வடிவேலுவை மேலும் பேசவொட்டாமல் தடுத்தது.

''என்ன, தம்பி! இன்னும் அந்தக் கிழட்டுக் குதிரையைக் கட்டிக்கொண்டுதான் அழுகிறாயோ! உன் குதிரை நல்ல வண்டியைச் சக்கு நூறாக்கி நானூறு ரூபாய் நஷ்டத்தை ஏற்படுத்திய பிறகும் உனக்குப் புத்தி வரவில்லையே!'' என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தான் மருதமுத்து.

''இந்தாங்க. அந்தக் குதிரையைப் பற்றி ஒன்றும் தவறாகச் சொல்லாதீங்க. எங்கள் வீட்டுக் காரரைக் காப்பாற்றி எங்களிருவரையும் சேர்த்து வைத்தது அதுதான்'' என்ற பார்வதி




# இரு துருவங்கள்

மாயா

சுவரில் அடித்த பந்து போல அன்று கதை தான் திரும்பி வந்தது. லக்ஷ்மியின் கல்யாண அழைப்பிதழும் அன்றைய தபாலிலேயா வந்து சேர வேண்டும்! இவ்விரண்டுக்கு முள்ள ஒரு தொடர்பைப் பற்றிய நினைவு வந்ததுமே விசுவத்தின் மனம் நிம்மதியிழக்கத் தொடங்கி விட்டது.

பத்திரிகையைப் பிரித்துப் பார்த்தான் விசுவம். வாழ்வில் தன்னந்தனியனாகி விட்ட அவனுக்குச் சற்று பொறுமையாகக்கூட இருந்தது. பத்திரிகையின் அடியில் அச்சாபீஸ் பற்றிய விவரம் காணும் இடத்தருகில், 'அவசியம் வந்து சேரவும்' என்று சிவப்பு மையினால் ஒரு குறிப்பும் எழுதியிருந்தது. அது லக்ஷ்மியின் கையெழுத்துத்தான் என்பதை ஊர்ஜிதம் செய்து கொள்ள விசுவத்திற்கு வெகு நேரமாகவில்லை. எங்கே ஒரு வேளை அவன் வராமலிருந்து விட்டு, தப்புச் சால்ஜாப்புச் சொல்லி விடுவானோ என்ற எண்ணத்தில் முன் யோசனையுடன் லக்ஷ்மிதான் அதை எழுதியிருந்தாள். இத்தனை தீர்க்க திருஷ்டியும் சாதுர்யமும் லக்ஷ்மி எப்படிக் கற்றாள் என்பது பற்றி விசுவம் தனக்குள் நினைத்து நினைத்து மிகவும் வியந்தான்.

• • •

நான்கு வருடங்களுக்கு முன்......

அன்றும் இதே போலக் கதை ஒன்று திரும்பி வந்தது. அதைத் தபால்காரரிடமிருந்து வாங்க நேர்ந்த லக்ஷ்மி அழுதே விட்டாள்! மாமாவின் கதை திரும்பி வந்ததில் அவளுக்கு அத்தனை துக்கம். விசுவத்திற்கே அவள் அழுகை வியப்பையும் சங்கடத்தையும் அளித்தது என்றால்

அதிகம் சொல்லுவானேன்! அப்பொழுதெல்லாம் விசுவத்தின் எழுத்துக்கு அவ்வளவாகக் கிராக்கி ஏற்படாத காலம். சூறாவளி வேகத்தில் தோன்றி, வந்த வேகத்திலேயே மறைந்து போன ஓரிரு பத்திரிகைகளில் மட்டுமே அவன் கதைகள் சில வெளியாகி யிருந்தன. மாமாவின் கதைகளும் அச்சு வாகனமேறி, அழகாக மற்ற கதைகளின் நடுவே அமைந்திருப்பதைப் பார்க்க லக்ஷ்மிக்கு எவ்வளவோ பெருமிதமாகத் தோன்றியிருக்க வேண்டும். கதைகள் திரும்பி வருவதில் விசுவத்திற்கு ஏற்படும் விரக்தியைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாக லக்ஷ்மி அலுத்துக்கொள்வாள். அத்துடன் திருப்பியனுப்பிய பத்திரிகாசிரியர்கள் வேறு அவள் வாயில் புகுந்து புறப்பட வேண்டும்!

'' பாவம்! எங்கள் மாமா விடிய விடியக் கண் விழித்துக் கை ஓடிய எழுதியனுப்புகிறார். அதைப் போட்டால் என்னவாம்! உடனே திருப்பியனுப்பி விடுகிறார்களே! அவர்களுடைய பத்திரிகைகளை மட்டும் இந்த இளிச்சவாய் மாமா ஏனோ வாங்கி விடுகிறார்!'' என்று அறியாமை ததும்பப் பேசுவாள் லக்ஷ்மி.

பதினொரு வயதான லக்ஷ்மி அன்று அப்படி இருந்தாள். ஆனால் இன்று...! 'அவசியம் வந்து சேரவும்' என்று எழுதக் கூடிய மன பக்குவம் அவளுக்கு ஏற்பட்டிருந்தது. அது பருவம் அவளுக்குக் கற்றுக் கொடுத்த வித்தையா, அல்லது விசுவத்தைப் பழிவாங்கும் மனோபாவமா! விசுவத்தால் திட்டமாக எதையும் அனுமானிக்க முடியவில்லை. இவற்றையெல்லாம் அழுத்தி விட்டு நினைவென்னவோ அந்த நாட்களின் அனுபவத்தில் கலந்து தற்கால சாந்தி தேடுவதில் முனைந்தது.

* * *

கண்ணாடிக்கெதிரில் நின்று கொண்டு தலைப் பின்னலை, முதுகுப் புறமாகக் கையை விடுத்து தளர்த்திக் கொண்டிருப்பாள் லக்ஷ்மி. விசுவம் ஒரு களைப்புக் களைத்து விட்டுத் தன் அறைக்குள் நுழையுமுன் அன்று வந்த தபாலுடன் அவளெதிரே வந்து விடுவான். அவன் வருகையினால் ஏற்பட்ட உவகை அவள் முகத்தில் விளையாடும். பின்னலை ஒயிலாக முன் பக்கம் கழுத்தை வளைத்துப் போட்டுக் கொள்வாள். பின்புறமாக கைகளைக் கட்டிக் கண்ணாடி பீரோவின் மேல் சாய்ந்தவாறு நின்று கொண்டு, கடிதங்களைப் பார்வையிடும் விசுவத்தையே வெறித்துப் பார்த்த வண்ணமிருப்பாள். இதை ஓரக் கண்களால் காண நேரும் விசுவத்திற்கு ஒரு புறம் சிரிப்பும், ஒருபுறம் அனுதாபமும் ஏற்படும்.

'இந்தப் பெண்ணுக்கு என்ன என்பேரில் இத்தனை மயக்கம்!' என்று நினைப்பான் அவன். இதை நினைக்கும் பொழுது இடையே அவனுக்கு ஒரு பெருமிதமும் ஏற்படுவதுண்டு, அவளைக் கவரும் உருவத்தைப் பெற்றிருப்பதில்.

அக்கா வீட்டிற்கு எவ்வளவோ பேர்கள் விசுவத்தின் நண்பர்களும் சரி, உறவினர்களும் சரி, வந்து போவார்கள். அத்தனை பேருடனும் ஒரே ரீதியில் பழகு அந்தத் தனிக்கலை அவன் அக்காவிடமிருந்து ஒவ்வொருவரும் கற்றுக் கொள்ள வேண்டிய ஒரு அம்சம். அவளுடைய மற்ற குழந்தைகளும் அப்படியே. ஓரிரு முறை கண்டு பழகி விட்டால் அப்புறம் வேற்றுமுகமே பாராட்டாதவர்கள். இந்தச் சூழ் நிலையில் லக்ஷ்மி மட்டும் தனியானவள். மற்றவர்களைப் போலின்றி அவளுக்கு விருப்பு, வெறுப்பு, வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்று பிரித்துப் பார்க்கும் சக்தியிருந்தது. வேலை மாற்றத்தின் காரணமாக அக்கா வீட்டிலேயே இருக்கத் தலைப்பட்ட நாள் முதலாக லக்ஷ்மிக்கு விசுவத்தின் மேல் ஒரு தனியான பிரேமை. இல்லை, ஒரு வேளை அது பிரமையோ!

அதை வேறு இலக்கிய மதிப்புள்ள வார்த்தையில் கூறி விட வெகு நேரமாகி விடாது. ஆனால் லக்ஷ்மியின் வயது அதைத் தடுத்து நிறுத்திவிடும். பதினொரு வயதான லக்ஷ்மிக்கு அவளைப் போல் இரண்டரை மடங்கு வயதில் பெரியவனான விசுவத்தின் பேரில் ஏற்பட்ட அன்பை, சிறு குழந்தையொன்றுக்கு அழகான பொம்மையிடம் ஏற்படும் ஒரு கவர்ச்சிக்கு ஈடாகத்தான் ஒப்பிடலாம். அவன் கதைகள் எழுதுவது குறித்து அவளுக்கு மட்டற்ற பெருமை. அவனைப் பற்றித் தன் தோழிகளிடத்தில் சொல்லிக் கொள்வதில் அவளுக்கு ஒரு தனி ஆர்வம். சுருள் சுருளாக நெளிந்து காணப்படும் அவன் 'கிராப்'பைக் கலைத்துவிடுவது அவள் தினப்படி விளையாட்டு. அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு அதில் எதையோ துழாவுவதில் ஒரு துடிப்பு. விளக்கம் வேண்டுமா! நம்மை ஆத்மார்த்தமாக நேசிக்கும் ஒருவரை, நமக்கு அவர் பேரில் இருக்கும் மதிப்பும் அன்பும் இன்னும் மேலிடும்படியாகச் சம்பவங்கள் நிகழும் பொழுது, மனதில் விகல்பமின்றி ஸ்பரிசித்து நம் மகிழ்ச்சியையும் அன்பையும் தெரிவிக்கத் தூண்டும் ஒரு நெகிழ்ச்சி ஏற்படுமே, அதுதான் லக்ஷ்மிக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். அவனைத் தொடாமல் பேச அவளுக்குத் தெரியாது. அதை சகஜமாக எடுத்துக் கொள்ளும் பரிபக்குவம் நல்ல வேளையாக விசுவத்தினிடமும் இருந்தது. அதில் கள்ளம் இல்லை, ஒளிவு மறைவும் இல்லை.

அவர்களிருவரும் ஒருவருக் கொருவர் காட்டிக் கொள்ளும் ஆதரம் மற்றவர்களின் போலியான கேலிக்கு இலக்காயிற்று. விசுவமே லக்ஷ்மியை மணந்து கொள்ள வேண்டிவரும் என்று விளையாட்டாகப் பேசிக் கொள்வார்கள் குடும்பத்திலுள்ளவர்கள். அது முதலே, கல்யாணம், தாம்பத்யம், வாழ்க்கை என்ற பிரச்னைகளின் முழுச் சிக்கல்களையும் அறியத் திறனில்லாத லக்ஷ்மி, விசுவத்துடன் இணைந்து தன் மண வாழ்வை மனோராஜ்யம் செய்யத் தொடங்கி விட்டாள் போலும்!

''மாமா, நான்தான் இந்த வீட்டிலேயே கறுப்பு. இல்லையா! நான் அழகாகவே இல்லை: இல்லையா!'' என்று ஓயாமல் கேள்விகளை அடுக்குவாள். அவளுடைய வெள்ளை உள்ளம் புண்படக் கூடாதே யென்று விசுவமும், '' நீ கறுப்பாயிருந்தாலும் குறிப்பாயிருக்கிறாய்!'' என்று தட்டிக் கொடுப்பான். உண்மையாகவே அவள் நாகப்பழக் கறுப்பல்ல; செந்தாமரைச் சிவப்புடன் ஒப்பிட்டு நோக்கினால்தான் அவளைக் கறுப்பு என்று துணிந்து கூற முடியும். ஆனாலும் என்னவோ லக்ஷ்மிக்குத் தன் நிறத்தைப்பற்றிய தாழ்வு மனப்பான்மை அடி நெஞ்சிலே ஆழப் பதிந்து விட்டது. அவள் பள்ளிக்கூட நாட்களில் கூட, தன்னைக் கறுப்பு நிறம் காரணமாக ஒதுக்கி விடுவார்கள் என்று அடிக்கடி குறைப்பட்டுக் கொள்வாள். இது எவ்வளவு தூரம் உண்மையோ! லக்ஷ்மியைத் திருப்தி செய்ய வேண்டி, அவளைக் காட்டிலும் கறுப்பாக உள்ள நபர்களை விசுவம் சுட்டிக் காட்டிய பின்னும் கூட அவளுக்குத் தன் நிறக்குறை ஒரு குறையாகவேதான் இருந்து வந்தது.

இவ்வளவுக்கும் இடையில் விசுவத்தின் கல்யாணம் நிச்சயமாகி நிகழ்ந்தது. கல்யாணத்தன்று லக்ஷ்மியைப் பார்க்க வேண்டுமே! அந்த வைபவ விழாவின் பொழுது சிறியவர்களுக்குரிய குதூகலத்தை அவளிடம் காணமுடியவில்லை. அடிக்

கூடி தனியிடங்களை விரும்பிச் சென்றான். தனக்கும் மாமாவுக்குமிடையே உள்ள பிணைப்பு, விசுவத்தின் மனைவியாகப் போகும் ராதையின் வரவால் அறுந்து போகுமோ என்றுதான் அவள் பயந்திருக்க வேண்டும். ராதையைப் பார்க்குந்தோறும் அவள் முகத்தில் கசப்பும் அலுப்பும் தோன்றி மறைவதை விசுவம் கண்டு கொண்டான். கல்யாணத்தன்று இரவு ஏதோ காரியமாக விசுவம் ஒரு அறையில் நுழைந்த பொழுது அங்கு லக்ஷ்மி தனியே இருந்தாள். விசுவத்தைக் கண்டதும் விசித்து விசித்து அழத் தொடங்கி விட்டாள். நிலைமையைச் சமாளிப்பது விசுவத்திற்குச் சற்று சங்கடமாகி விட்டது. இதில் அதிசயம் என்னவென்றால் அவள் அழுகைக்குக் காரணம் கேட்ட பொழுது அவள் கூறிய பதில்தான்.

"லக்ஷ்மி! எதற்காக இப்பொழுது அழுகிறாய்!"

"எனக்கே தெரியவில்லை, மாமா!"

பண்படாத மனம் ஒன்று அன்பு காரணமாகத் தவிக்கும் நிலையை விசுவம் அன்றுவரை பார்த்ததில்லை. கண்ணுக்கெதிராகக் கண்ட பிறகுதான் பாசத்தின் பிணைப்பையும் அதன் முழுச் சக்தியையும் அவனால் உணர முடிந்தது.

"என்னோடு இனிமேல் பேசுவாயா, மாமா!" என்று கேட்டாள் லக்ஷ்மி.

"பைத்தியமே! உன்னோடு பேசாமல் என்ன! உனக்காக வேணுமானால் ராதையோடும் பேசாமலிருக்கிறேன், இப்பொழுது சரிதானே!" என்றான். அவனுடைய பதில் லக்ஷ்மிக்குச் சிறிது திருப்தி அளித்திருக்க வேண்டும். மழைத் துளிகள் விழுந்து கொண்டிருக்கும் பொழுதும் சில சமயம் இளவெயில் காயுமே, அதுபோலக் கண்ணீர் வழிந்த கன்னங்களில், உதடுகள் உமிழ்ந்த புன்னகை பரவியது. சிரிப்பும் அழுகையும் கணநேரத்தில் வரவழைக்கும் மாயா ஜாலம் பெண் வர்க்கத்தின் ஏகபோக உரிமை போலும்! இதெல்லாம் பழைய கதை.

* * *

வருடத்தில் மூன்றை விழுங்கிய காலதேவன் தன் பசி தீராத காரணத்தாலோ என்னவோ, விசுவத்தின் துணைவி ராதையைத் தன் கொடுமைக் கைகளால் அபகரித்துக் கொண்டான். விதி, அவளை விழுங்க 'அபார்ஷன்' உருவில் வந்தது. இத்தகைய அதிர்ச்சியைத் தாங்கக்கூடிய மனோபலம் சிறு வயது முதலே விசுவத்திடமிருந்தது.

இரண்டாம் கல்யாணத்தை அடியோடு விசுவம் வெறுப்பவன். முதல் மனைவியுடன் குறுகிய கால அளவு வாழ்ந்திருந்தாலும் அதுவே போதும் என்ற கொள்கையை யுடையவன். ராதையின் பிரிவு அவன் வாழ்வில் ஏற்படுத்திச் சென்ற விரிசல் ஒன்றே அவன் பழைய லட்சியம் எத்தனை கொடுமையானது என்பதை எடுத்துக் காட்டியது.

அக்கா வீட்டிற்கு ஒருமுறை விசுவம் செல்ல நேர்ந்தது. அவன் மனதில் எழுந்த ஆசையைச் 'சபலம்' என்று சொல்லிவிட முடியாது. 'மனிதனின் பலவீனம்' என்று குறிப்பிடலாம். லக்ஷ்மி, மண வயதின் எல்லைக் கோட்டில் வந்து நின்றாள். அக்காவோ இருக்கவே இருக்கிறாள், அவன் ஆசைக்குத் தூபம் போட! ஆனால் லக்ஷ்மியின் மனதை அறியவேண்டி விசுவம் மழுப்பலாக இருந்தான்.

லக்ஷ்மியின் பேச்சு அவனுக்கு இடிபோன்ற அதிர்ச்சியைக் கொடுத்தது. அவள் விசுவத்திற்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட மறுத்து விட்டாள்! இது விஷயத்தை எல்லோருக்கும் முன்பாக வந்து நின்று துணிந்து கூறிய அவள் தைரியத்தைக் கண்டு விசுவம் அசந்தே போனான். புதுமைப் பெண் ஒருத்தியின் புரட்சிக் குரல் போல அது அவன் இருதயத்தை ஊடுருவியது. தன்னையே காட்சிப் பொருளாக மலைத்து மலைத்துப் பார்த்தும் மயக்கம் தெளியாதவளாக ஒரு காலத்திலிருந்த லக்ஷ்மியால் திரஸ்காரம் செய்யப்பட்ட அவல நிலையை நினைத்து வெட்கமும் அவமானமும் அவனைக் கவ்வின. தன்னைச் சரியான தருணத்தில் அவள் பழி வாங்கிவிட்டாள் என்றே அவனுக்குத் தோன்றியது. அதற்குமேல் அக்கா வீட்டில் அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை.

* * *

அண்மையில், ஆறு மாதங்களுக்கு முன் வரை நிகழ்ந்த சம்பவங்களை புரட்டிப் பார்த்து விட்ட அவனுடைய மனம் பத்திரிகையில் கண்ட 'அவசியம் வந்து சேரவும்' என்ற வாசகத்தில் லயித்தது. அரை மனதுடன் லக்ஷ்மியின் கல்யாணத்திற்குச் சென்றான்.

லக்ஷ்மிக்கு வாய்த்தவன் வெகு அழகாக விளங்கினான். பருவம், லக்ஷ்மியைப் புரட்சிகரமான அழகியாக மாற்றியிருந்தது. அவளுடைய கறுத்த மேனியில் ஒரு தளதளப்பும், முகத்தில் விசுவம் சொல்லி வந்த அந்தக் 'குறிப்பு'ம் உண்மையாகவே சுடர் விட்டுத் தெறித்தன. ஜோடியாக அவர்களைப் பார்ப்பதில் விசுவத்தின் மனம் பூரிப்படைந்தது. மாப்பிள்ளையின் ஸ்தானத்தில் தன்னை நிறுத்தி மனக் கண்களில் கண்டான். ரசிக்கவில்லை! புது மலரைத் தாலாட்டத் தென்றல்தானே தகுந்த தொட்டில்!

"லக்ஷ்மி! இப்பொழுது திருப்திதானே!" என்று அவளைத் தனியே சந்திக்க நேர்ந்தபொழுது கேட்ட பின்னரே, கேட்டதின் பிசகை உணர்ந்தான் விசுவம். அவன் குரலில் தொனித்த வன்மம் அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டது.

"மாமா, மாமா! நிஜமாகச் சொல்கிறேன். நான் அன்று உங்களை மறுத்துக் கூறியது புண்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் அல்லவே அல்ல. உங்களிடம் நான் கொண்டிருக்கும் அன்பு பகவானிடத்தில் ஒரு பக்தன் காட்டும் பவித்திரமான பக்திக் காதலுக்கு ஒப்பாகும். அதற்குக் 'கல்யாணம்' என்ற உருவம் அளித்திருந்தால் அது நம்மிருவருக்குமே அலுத்துப் போய்ச் சலித்திருக்கும்" என்று அழ அழச் சொல்லி உடல் குலுங்கக் கேவித் திணறினாள் லக்ஷ்மி.

"வாழ்க்கையெனும் காந்த ஊசியின் இரு துருவங்கள் விருப்பும் வெறுப்பும். விருப்பினால் ஆகர்ஷிக்கப்படும் பொழுது உணரும் சுகம் வெறுப்பினால் எதிர்த்துத் தள்ளப்படும் பொழுது ஏற்படுவதில்லை. ஆனால் வாழ்க்கை யென்பதோ சுக துக்கம் கலந்த அனுபவந்தானே!" என்று முன்பு தன் கதையொன்றில் எழுதிய வரிகள் விசுவத்தின் நினைவில் மிதந்தன.

தத்துவார்த்தமாகப் பேசி அவனைத் திணற அடித்த லக்ஷ்மியின் அறிவைக் குறித்த பெருமை ஒருபுறமிருக்க, நல்ல பொம்மையின் கை, கால் உடைந்து போனால் அதை எறிந்துவிட்டு மற்றொன்றை விழையும் குழந்தை மனோ பாவத்தைக் கடந்துவிட்ட லக்ஷ்மி, இளமையின் இன்பத் துடிப்பைப் பருவம் படைத்தவனுடன் பங்கிட்டுக் கொண்டு வாழ விரும்பியே தன்னை மணந்து கொள்ள மறுத்திருக்க வேண்டும் என்று தன்னிடையே எழும் எண்ணத்தை மட்டும் விசுவத்தினால் கிள்ளி யெறிய முடியவில்லை!

# விதியின் கூத்து!

புஷ்யன்

“நம் கையாலாகாத்தனத்தை மறைப்பதற்கு, ‘விதி, விதி’ என்று வெறுமனே அதை ஏன் இழுக்க வேண்டும்? ராமு ஏன் தைரியமாய்த் தன் தகப்பனாருடன் போராடி உண்மையைக் கூறிச் சாரதாவை மணந்திருக்கக் கூடாது? அவளுக்கு வாக்குறுதி கொடுத்து விட்டுக் கடைசியில் கைவிட்டு விட்டான். அவள் மனம் உடைந்து மானத்துக்கு அஞ்சி உயிர் விட்டு விட்டாள். அதை அவள் தலை எழுத்து, விதி என்று கூறிச் சமாதானப் படுத்திக் கொண்டால் சரியாய்ப் போய் விடுமா? விதி என்று ஒன்று இருக்கிறதா என்ன? அதெல்லாம் கிடையாது. நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ள, நம் பலவீனத்தை மறைக்க உபயோகப்படுத்தும் கோழைத்தனமான வார்த்தை” என்று ஆவேசமாகக் கூறினான் விஸ்வம்.

“ராமுவின் கோழைத்தனம் வெறுக்கப்பட வேண்டியதுதான். அவனைப் போன்றவர்களைச் சித்திரவதை செய்ய வேண்டியது தான். ஆனால் இதை அவன் மன நிம்மதியுடன் செய்தான் என்று சொல்லிவிட முடியுமா? அப்படி அவன் செய்தால் அது குற்றம். ஆனால் முயற்சி செய்தும் வெற்றி கிடைக்காமல் அல்லது முயற்சி செய்ய வேண்டுமென்ற ஆசை இருந்தும் செய்ய முடியாமல் போகும் ஒரு நிலை வருகிறதே, அதாவது நம்மைப் பலவீனப்படுத்தும் அந்த சக்தி அதைத் தான் ‘விதி’என்று கூறுவார்கள். அந்த விதியை நீ கிடையாது என்று எப்படிக் கூற முடியும்?” என்றான் ரமணி.

“மனிதன் முயற்சி செய்தால் நடக்காத காரியம் இல்லை. மனமிருந்தால் வழியுண்டு. நன்றாக, தீர ஆலோசித்து ஒவ்வொரு காரியத்தையும் திட மனத்துடன், புத்திசாலித்தனமாய்ச் செய்தால் வெற்றி தவிரத் தோல்வி கிடைக்க வழியே கிடையாது” என்று அழுத்தமாகக் கூறினான் விஸ்வம்.

“நீ சொல்வது சரிதான். இருந்தாலும் என் நண்பன் சங்கரனுடைய கதையைச் சொல்லுகிறேன். அப்போது ஒருவாறு விளங்கும் ‘விதி’யின் தத்துவம்” என்றான் ரமணி.

“விதி கிடக்கட்டும்; கதையைச் சொல்லு, கேட்கலாம்” என்றான் விஸ்வம்.

## 2

சங்கர நாராயணன் என்னுடைய நண்பன். ரொம்பவும் தங்கமான குணம் உடையவன். எப்போதும் புன்னகையுடன் விளங்குவான். மிகவும் தெய்வபக்தி உள்ளவன்.

ஒரு சமயம் எங்கள் ஊருக்கு ஒரு சாமியார் வந்தார். அவர் தெய்வத்தைப் பற்றிப் பேசினார். யோகாசன மகிமையைப் பற்றிக் கூறினார். அதன் மூலம் கடவுளின் அருளைப் பெறுவது மிகவும் சுலபம் என்றார். சில ஆசனங்களைப் போட்டுக் காண்பித்தார். ஹட யோகம் செய்து காண்பித்தார். எல்லாரையும்விட சங்கர நாராயணன் இதையெல்லாம் மிகவும் கவனமாகக் கவனித்து வந்தான்.

அடுத்த நாள் காலையில் சங்கர நாராயணனுடைய வீட்டுக்குப் போனேன். அவன் தலை கீழாய் நின்று கொண்டிருந்தான். “ஏண்டா இப்படித் தலை கீழாக நிற்கிறாய்?” என்றேன்.

“நேற்று நீ கேட்ட பிரசங்கத்தின் லட்சணம் இதுதானா? இனி நான் பிரம்மச்சாரியாகவே வாழ் நாள் முழுதும் கழித்து விடுவதாகத் தீர்மானித்து விட்டேன். யோகாசனங்கள் பழகப் போகிறேன்” என்றான்.

அன்று முதல் அவன் தீவிரமாக யோகாசனங்களைப் பழகி வந்தான்.

## 3

சங்கர நாராயணனுக்கு இப்பொழுது வயது இருபத்தைந்து ஆகிவிட்டது. இதை உணர்ந்த அவன் பெற்றோர்கள் அவனுக்கு ஒரு முடிச்சைப் போட்டுவிட வேண்டும் என்று தீர்மானித்தனர்.

சங்கர நாராயணன் நல்ல அழகு வாய்ந்தவன். சிவப்பாய் இருப்பான். கன்னங்கரேலென்று சுருண்ட மயிர். ஆஜானுபாகுவான உருவம். யோகாசனத்தால் உண்டாகிய ஒரு தனிக் களை பார்ப்பவர்களை வசீகரிக்கச் செய்தது. அவனுடைய தகப்பனாருக்கு நல்ல நிலபுலன்களும் இருந்தன. அப்படியிருக்கும் போது அவனுக்குப் பெண்ணைக் கொடுக்க வருபவர்களைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு தங்கள் பெண்களைக் கொடுக்க முன் வந்தனர்.

தங்கள் பிள்ளைக்கு இவ்வளவு கிராக்கி இருப்பதைக் கண்டு அவனுடைய பெற்றோர்கள் பெருமைப் பட்டுக் கொண்டனர். ஒவ்வொரு பெண்ணின் ஜாதகமாகப் பொருத்தம் பார்த்தனர். ஜாதகம் பொருத்தமாகவும், மனத்துக் கிசைவாகவும் இருக்கும் ஜாதகங்களை எடுத்துக் கொண்டு சங்கர நாராயணனிடம் வந்து, “இதில் உனக்கு எது பிடித்திருக்கிறது?” என்று கேட்டார் அவனுடைய தகப்பனார்.

இதைக் கேட்டதும் முதலில் அவன் திடுக்கிட்டான். பிறகு, “அப்பா! எனக்குக் கலியாணமே வேண்டாம். நான் பிரம்மச்சாரியாகவே இருக்கப் போகிறேன்” என்றான்.

“என்னடா! நாடகத்தில் நடிப்பதைப் போல் பேசுகிறாயே. கல்யாணம் வேண்டாமாம், கல்யாணம். வெட்கமாயிருந்தால் சொல்லு, நாங்களே முடித்து வைக்கிறோம்” என்றார் தகப்பனார்.

“எனக்கு வெட்கமுமில்லை, ஒன்றுமில்லை! உண்மையாகவே நான் கல்யாணம் செய்து

கொள்ளப் போவதில்லை. தினமும் யோகாசனம் செய்வதும் நிஷ்டையில் அமர்வதும் எதற்கென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? நான் இமயமலைச் சாரலுக்குப் போகப் போகிறேன்......".

"இதேதடியம்மா விநோதமான பிள்ளையாயிருக்கிறதே!" என்று வியந்தாள் தாயார்.

தகப்பனார் மெதுவாக, "சங்கரா! எங்களிடம் ஒன்றும் பயப்பட வேண்டாம். வேறு யாரையாவது காதல் கொண்டு விட்டாயா என்ன? அப்படியிருந்தால் அவளையே வேண்டுமானாலும் முடித்து வைக்கிறேன். அதற்காக நீ பயந்து கொண்டு ரிஷியாய்விடப் போகிறேன் என்று உளறாதே" என்றார்.

"காதலும் இல்லை, கத்தரிக்காயும் இல்லை. எல்லா ஸ்திரீகளையும் நான் தாயாகவும், சகோதரியாகவும் பாவிக்கிறேன்" என்று கம்பீரமாகச் சொன்னான்.

அவனுடைய பேச்சைக் கேட்ட தகப்பனார் இடிந்து போய் விட்டார். அவன் பேச்சின் தோரணையிலிருந்து அவ்வளவும் உண்மை என்று காணப்பட்டது.

இதற்குள் அவனுடைய தாயார், "ஐயோ பகவானே! என் ஒரே பிள்ளை இப்படியாகி விட்டதே! பெண்டாட்டியும் பிள்ளையுமாய் வாழ்வதைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப் பட்டுக் கொண்டிருந்தேனே. எல்லாம் வியர்த்தமாகிவிடும் போல் இருக்கிறதே. நான் என் பிள்ளையை மணக் கோலத்தில் காண மாட்டேனா?" என்று பிரலாபிக்க ஆரம்பித்து விட்டாள்.

சங்கரன் தன் பிடிவாதத்திலிருந்து சிறிதும் மாறவில்லை. எப்போதும் போல் தன் நியம நிஷ்டைகளில் வழுவாமல் இருந்து வந்தான்.

நல்ல, நல்ல இடமாக வந்து போய் விட்டதே என்று அங்கலாய்த்தார்கள் அவனுடைய பெற்றோர்கள். பெண்ணைக் கொடுக்க வந்தவர்களுக்கெல்லாம், "அதென்னமோ அவன் யோகம், தவம், நிஷ்டை என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். அவனை அதிகம் நெருக்கினால் இப்போதே வீட்டை விட்டுப் போய் விடுவானோ என்று பயமாய் இருக்கிறது. என்றைக்குத்தான் அவனுடைய புத்தி திரும்பப் போகிறதோ" என்று சொல்லி வந்தார்கள்.

## 4

இப்படியிருக்கும்போது என் நண்பர் ரகுபதி, தன் பெண்ணுக்குத் தகுந்த வரன் ஒன்று பார்க்கும்படி எழுதியிருந்தார். அவர் மிகவும் ஏழை. கிளிஞ்சலூரில் பள்ளிக்கூட உபாத்தியாயர். கொஞ்சம் நிலமும் இருந்தது. அவர் தானாகவே மாப்பிள்ளையைத் தேடி முடித்துவிடப் பிரயத்தனம் செய்தார். அது ஒன்றும் பலிக்காமற் போகவே கடைசியில் எனக்குக் கடிதம் எழுதினார்.

நான் பெண்ணுக்குப் பிள்ளையை எங்கென்று தேடுவது? நானே பிரம்மச்சாரி!

ரகுபதியின் கடிதத்தைப் பார்த்ததும் சங்கர நாராயணனுடைய ஞாபகம் வந்தது.

அவனை எப்படியாவது அந்த ஏழை உபாத்தியாயருக்கு மாப்பிள்ளையாக்கி விட வேண்டும் என்ற அசட்டு எண்ணம் என் மனத்தில் ஏற்பட்டு விட்டது.

* * *

கிளிஞ்சலூருக்கு இரண்டு மைல் தூரத்தில் சுனை யொன்று இருக்கிறது. அங்குள்ள இயற்கைக் காட்சி மிகவும் அழகாயிருக்கும். மனத்துக்குச் சந்தோஷத்தை யுண்டாக்கும். அங்கு போனது சுவர்க்கத்துக்குள் நுழைந்து விட்ட மாதிரியிருக்கும். அந்தச் சுனையில் நீராடினால் நாம் புது மனிதர்களாய் மாறிவிட்டாற் போலத் தோன்றும்.

சங்கர நாராயணனுக்கு, சன்னியாசப் பித்து கொண்ட அவனுக்கு அப்பேர்ப்பட்ட இடத்துக்குப் போக வேண்டுமென்றால் மிக மகிழ்ச்சியாகத் தானே இருக்கும்!



இருவரும் ஒரு நாள் கிளிஞ்சலூருக்குப் புறப்பட்டோம். கிளிஞ்சலூரில் அந்த உபாத்தியாய நண்பரைத் தவிர மற்றும் ஒரு உறவினரும் கூட இருந்தார். அவர் வீட்டில் போய் இறங்கினோம்.

அடுத்த நாள் அதிகாலையில் எழுந்து சுனைக்குப் புறப்பட்டோம். மனம் சலிக்கு மட்டும் சுனையில் குளித்தோம். சுற்றி உள்ள மரங்களின் நிழலில் பர

மானந்தமாகச் சிறிது நேரம் பொழுதைப் போக்கினோம். சங்கரநாராயணனுக்கு அந்த இடத்தை விட்டு வர கொஞ்சம் கூட மனமில்லை. நீண்ட நேரம் கழித்துச் சுனையிலிருந்து திரும்ப மனமின்றித் திரும்பி வந்தோம்.

வரும் வழியில், "ரமணி! இத்தனை நாளாய் இமயமலைக்குப் போக வேண்டும், அங்கு போய்ப் பத்மாஸனம் போட்டுக் கொண்டு உட்கார்ந்துவிட வேண்டும் என்று நினைத்திருந்தேன். ஆனால் என் மனம் பக்குவமடைந்ததும் இங்கு வந்துவிடலாம் என்று தோன்றுகிறது. என்ன சாந்தி! அடடா! இந்த அமைதியான இடம் இவ்வளவு அருகில் இருப்பது எனக்கு இத்தனை நாள் தெரியாமல் போய்விட்டதே" என்றான் சங்கரன்.

"கவலைப்படாதே! இனி அடிக்கடி இங்கு வந்து போகும்படி உனக்குச் சௌகரியங்கள் செய்து தருகிறேன்" என்று கூறினேன். என் மனம் உபாத்தியாயர் ரகுபதிக்கு இவனை எப்படி மாப்பிள்ளையாக்குவது என்று யோசித்துக் கொண்டிருந்தது.

மத்தியானம் சாப்பாட்டு வேளைக்குக் கிளிந்தஊருக்குத் திரும்பிவிட்டோம். உறவினர் வீட்டில் சாப்பாடு எல்லாம் முடிந்தது. மாலை சுமார் நாலு மணிக்கு நான் ஒரு 'பிள்ளையாண்டானை' அழைத்து வருவதாகவும், பெண்ணைச் சிங்காரித்து வைத்திருக்கும்படியும் ரகுபதிக்கு ஆள்விட்டனுப்பினேன்.

கொஞ்ச நேரம் கழித்து சங்கர நாராயணனிடம், "என் நண்பர் ஒருவர் இருக்கிறார் அவரைப் போய்ப் பார்த்து வரலாம் வா" என்று அழைத்துக் கொண்டு கிளம்பினேன்.

ரகுபதியின் வீட்டில் உட்கார்ந்து சாவதானமாகப் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது ரகுபதி, "இதோ போய் டிபன் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே எழுந்து போனார்.

நாங்கள் இருவரும் தனியாயிருந்தோம். அவனிடம் விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். ரகுபதி மிகவும் ஏழை யென்றும், பெண்ணை வைத்துக் கொண்டு மாப்பிள்ளையைத் தேடு தேடென்று தேடியும் கிடைக்கவில்லை யென்றும் அதற்குக் காரணம் அவனைப்போல் 'பிரம்மச்சாரியாகவே இருக்கப் போகிறேன்' என்று பீற்றிக் கொள்பவர்களும், வரதட்சணை என்று பிடுங்கும் பேர்வழிகளும்தான் என்றும் சொன்னேன். அவன் மௌனமாக இருந்தான். ஆனால் என்னைக் கோபத்துடன் பார்த்தான். புது இடமானதால் கோபத்தைக் காட்ட முடியவில்லை.

அப்போது ரகுபதியின் மகள் ராஜேசுவரி ஒரு தட்டில் டிபனும், கூஜாவில் காப்பியுமாக வந்து மேஜைமேல் வைத்து விட்டு அவனை நமஸ்கரித்தாள். சங்கர நாராயணன் அப்படியே திகைத்துப் போய்விட்டான். அவன் முகத்தில் ரத்தம் குப்பென்று ஏறிச் சிவந்து விட்டது. ரகுபதியும் வந்து எங்களுடன் உட்கார்ந்து கொண்டார். சம்பிரதாயமாக அந்தப் பெண் எதிரில் உட்கார்ந்து



"நம்முடைய மூதாதையர்கள் எல்லாம் மனுஷர்களாமே!"

ஏதோ பாடிற்று. சங்கர நாராயணன் சுவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

நான் ஒரு தடவை அவனுடைய துடையை மெதுவாகக் கிள்ளிப் பெண்ணைப் பார்க்கும்படி ஜாடை காட்டினேன். அப்புறம் ராஜேசுவரி பக்கம் திரும்பி அவனையே சிறிது நேரம் கண் கொட்டாது உற்றுப் பார்த்த வண்ணம் இருந்தான். ராஜேசுவரி அவ்வப்போது கடைக் கண்ணால் அவனைப் பார்த்தவாறே கம்பீரமாகப் பாடினாள்.

எல்லாம் முடிந்தவுடன் புறப்பட்டோம். "நீங்கள் பேசாமல் இருங்கள், நான் கவனித்துக் கொள்கிறேன்" என்று ரகுபதிக்கு மட்டும் ஜாடை காட்டினேன்.

வீட்டுக்குப் புறப்படும்போது, "ரமணி! இதென்ன சதிவேலை செய்ய ஆரம்பித்து விட்டாய்? நான்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று தீர்மானித்திருக்கும்போது இப்படி ஏன் செய்தாய்?" என்று எரிந்து விழுந்தான் சங்கரன்.

"இப்போது என்ன தலை முழுகிவிட்டது? உனக்கு இஷ்டமில்லாவிட்டால் யார் உன்னைக் கட்டிப் பிடித்துக் கொள்ளப் போகிறார்கள்?" என்றேன்.

சங்கர நாராயணன் ஏதோ சொல்ல வாய் திறந்தான். ஆனால் ஒன்றும் பதில் சொல்லவில்லை. மௌனமாகவே நடந்தான்.

"என்ன பேசாமலிருக்கிறாய்? பெண்ணைப் பிடித்திருக்கிறதா இல்லையா? சொல்லிவிடு. இன்னும் பிரம்மச்சாரி வேஷம் போடுகிறாயா? இதெல்லாம் நிலைக்காது" என்றேன்.

"உம்......" என்று ஒரு பெருமூச்சு விட்டான் சங்கர நாராயணன்.

எனக்கு விஷயம் புரிந்து விட்டது. வேண்டாம் என்று சொல்ல முடியாமல் விழிக்கிறான். அவன் உள்ளத்தில் 'கல்யாண விஷயம்' புகுந்து போராட்டத்தை உண்டாக்குகிறது என்று கண்டு கொண்டேன்.

## 5

ஊருக்குத் திரும்பி வந்ததும் எல்லா விஷயத்தையும் சாங்கோபாங்கமாக அவன்

பெற்றோர்களிடம் கூறினேன். அவர்களும் சங்கர நாராயணனைக் கேட்டார்கள். அப்போதும் அவனுடைய உள்ளத்தில் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. வேண்டாம் என்று முன்போல் எதிர்த்துத் தைரியமாய்ப் பதில் சொல்ல முடியாமல் அவனை ஏதோ ஒன்று தடுத்தது. கல்யாணம் செய்து கொள்ளுகிறேன் என்று சொல்ல முடியாமல் தவித்துக்கொண்டிருந்தான்.

நான் கல்யாண விஷயங்களைக் கவனிக்கும்படி பெற்றோர்களுக்குக் கூறினேன். எல்லாம் விரைவாக நடந்தேறின. சங்கர நாராயணன் மௌனமாக இருந்தான். சில சமயம் உற்சாகமாகப் பேசுவான். ஒவ்வொரு சமயம் எவ்வளவு கூப்பிட்டாலும் பேசாமல் சிந்தாக்கிராந்தனாக உட்கார்ந்து விடுவான்.

கடைசியில் ராஜேசுவரிக்கும், சங்கர நாராயணனுக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடைபெற்றது.

கொஞ்சம் கொஞ்சமாக ஆள் ஒரேயடியாக மாறி விட்டான். அவனுடைய யோகாசனம் எல்லாம் எங்கோ ஓடி விட்டன. இப்போது அவன் மனைவியோடு சந்தோஷமாகக் குடும்பம் நடத்திக் கொண்டிருக்கிறான்.

* * *

"கல்யாணம் வேண்டாம், பிரம்மச்சாரியாகவே காலம் கழிக்கப் போகிறேன் என்று பிடிவாதம் பிடித்து ராஜேசுவரியைவிட எவ்வளவோ உயர்ந்த அந்தஸ்து, படிப்பு, அழகு எல்லாம் வாய்ந்த பெண்களை யெல்லாம் தட்டிக் கழித்து விட்டான். கடைசியில் ராஜேசுவரியை, ஏழை உபாத்தியாயரின் பெண்ணை மணந்தான். ராஜேசுவரி அப்படி ஒன்றும் பிரமாதமான அழகி இல்லை. நல்ல கட்டுப் பெட்டியுங்கூட.

"அவன் பிரம்மச்சாரி பிடிவாதம் பிடித்தானே ஒழிய அது நிலைத்ததா? இல்லை. கடைசியில் இல்லறத்தில் புகுந்தான். அப்படி மணந்தவன் ஏன் முதலிலேயே ராஜேசுவரியைவிட எல்லா விதங்களிலும் உயர்ந்த பெண்ணை மணந்திருக்கக் கூடாது? ராஜேசுவரியை மணக்கும்போது வாய் மூடி மௌனமாக இருந்தவன் அதற்கு முன்னெல்லாம் ஏன் 'யோகாசனம், இமயமலைச் சாரல்' என்று கூறித் தட்டிக் கழிக்க வேண்டும்? அப்படி அவனைக் கூறித் தடுத்தது எது? அந்தச் சக்தியை என்னவென்று சொல்லுவது?

"ராஜேசுவரிக்குப் பதில் வேறு நல்ல இடமாகப் பார்க்கலாமா என்றுகூட அவனுடைய பெற்றோர்கள் பார்த்தார்கள். ஆனால் சங்கர நாராயணன் அதற்குச் சம்மதிக்கவில்லை. ராஜேசுவரியைத்தான் மணந்து கொள்வேன் என்பதுபோல் நடந்து கொண்டான். அப்படிப் பேசச் செய்தது எது?

"ஆம், அவனையும் அறியாத ஓர் சக்தி வேலை செய்தது. அது அவனுடைய உள்ளத்தில் புகுந்து அவனை ஆட்டிற்று. அதை அடக்க முடியவில்லை அவனால். யாராலும் முடியாது. அந்தச் சக்தியைத்தான் 'விதி' என்று கூறுகிறார்கள்" என்று கூறி முடித்தான் ரமணி.

"இல்லை, இல்லவே இல்லை. உன்னுடைய முயற்சியால்தான் இந்தக் கல்யாணம் நடந்தது" என்றான் விஸ்வம்.

"விதி என் உருவத்தில் வேலை செய்தது என்று சொல்லு!" என்றான் ரமணி.

# பம்பாயில் கலைவிழா

பம்பாய்-மதுங்காவில் சென்ற வருஷம் வரையில் தனித் தனியாகக் கலைத் தொண்டு செய்து வந்த ஸ்ரீ சண்முகானந்த பைன் ஆர்ட்ஸ் சபையும் தென்னிந்திய சங்கீத சபையும் ஒன்று சேர்ந்ததின் பலன் இந்த வருஷத்தின் ஆரம்பத்தில் நன்கு வெளியாயிற்று. ஒற்றுமைப்பட்ட சபையின் கட்டிட நிதிக்காக நடத்திய கலைவிழா அபரிமிதமான ரஸிகர்களின் ஆதரவுடன் அமோகமாக நடந்தது. ஜனவரி 5-ட விழா ஆரம்பமாகி எட்டு நாட்கள் நடந்தன. முதல் நாள் கலைவிழாவைப் பம்பாய்க் கவர்னர் கனம் ராஜா மகாராஜ சிங் ஆரம்பித்து வைத்தார். கனம் ஆர். ஆர். திவாகர், ஸ்ரீ எஸ். கே. பாடில் முதலிய பிரமுகர்கள் கலை நிகழ்ச்சிகளுக்கு விஜயம் செய்து ஆதரவு அளித்தார்கள். கர்நாடக சங்கீத உலகில் புகழ்பெற்ற செம்மங்குடி சீனிவாச ஐயர், மதுரை மணி ஐயர், அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், ஜி. என். பி., ஆலத்தூர் சகோதரர்கள், டி. என். சுவாமிநாத பிள்ளை, ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், குமாரி கமலா, நாதஸ்வர வித்வான் திருவெண்காடு சுப்பிரமணியப் பிள்ளை ஆகியவர்கள் விழாவில் அருமையான கச்சேரிகள் செய்து சிறப்பித்தார்கள். பிரபல சினிமா நட்சத்திரமான ஸ்ரீமதி நர்கீஸ், சினிமாவுக்கு இரவல் குரல் அளிக்கும் பிரபல பாடகிகளான தோராப், லக்ஷ்மி சங்கர், ஷார்தா காட்கர்னி, குர்ரானி, தலத் மகமூத், மகமத் ரபி ஆகியவர்கள் ஒரு நாள் இசைவிழாவில் பங்கெடுத்துக் கொண்டு ஒவ்வொருவரும் இரண்டு கீதங்கள் பாடிச் சபையோரை மகிழ்வித்ததுடன், "இன்னொன்று; இன்னொன்று" என்று சபையோர் கோரியதையும் நிறைவேற்றினார்கள்.

இந்த விழாவை இவ்வளவு சிறப்பாக நடத்தியவர்களின் திறமையைக் குறித்து பம்பாயில் காங்கிரஸுக்கு மகத்தான வெற்றி தேடித் தந்த ஸ்ரீ எஸ். கே. பாடில் அவர்களே 'மூக்கின்மேல் விரலை வைத்து அதிசயித்தார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று மேற்படி விவரங்களை எழுதியுள்ள ஸ்ரீ ரா. பத்மநாபன் தமது அதிசயத்தையும் சேர்த்துத் தெரிவித்திருக்கிறார். பம்பாயில் சிறந்த முறையில் சங்கீத மண்டபம் நிறுவ வேண்டும் என்கிற ரஸிகர்களின் கனவு கூடிய சீக்கிரத்தில் நனவாகி விடும் என்று நம்புகிறோம்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 3. ராஜகோளம்

இதற்கு முன்பு பல அத்தியாயங்களில் நம் சரீரத்திலுள்ள கோளங்களைப் பற்றிச் சொல்லப் பட்டிருக்கிறது. அப்பொழுது பிட்யூட்டரி கோளத்தைப் பற்றியும், பீனியல்பாடி கோளத்தைப் பற்றியும் லேசாய்த்தான் எடுத்துக் காட்டப்பட்டிருந்தது. சர்வாங்காசன அத்தியாயங்களில் தைராய்ட் கோளத்தைப் பற்றி மிக விரிவாய் விவரிக்கப்பட்டுள்ளது.

பிட்யூட்டரி கோளமானது, இந்தத் தைராய்ட் கோளத்தைவிட சிறந்ததும், அதையும் அதைப் போன்ற பல கோளங்களையும் கட்டி ஆளும் திறனையும் படைத்தது. இதுவே சர்வாதிகாரம் படைத்த ராஜகோளமாகும். அவ்வளவு முக்கியமான பிட்யூட்டரியானது உருவத்தில் மிக மிகச் சிறியது. ஒரு பெரிய பச்சை பட்டாணிக் கடலை அளவேயுடையது. அதற்குத் துணையான பீனியல்பாடி அதைவிட கால் பங்கு அளவே உடையது. ஒரு பொட்டு; ஒரு துளி மாத்திரம் என்னலாம். இவை நமது சிரசில் மிக மிகப் பத்திரமான இடத்தில் இருக்கின்றன. மண்டையோட்டுப் பெட்டிக்குள் மூளையிருக்கிறதல்லவா! அந்த மூளைக்கு மத்தியில் மூளையின் அடிபாகத்தில் இவை இருக்கின்றன. பிட்யூட்டரி கீழேயும், பீனியல்பாடி அதற்கு நேர் மேலேயும், பெரிய பொட்டு கீழேயும், சிறிய பொட்டு மேலேயும் இருப்பது போல் இருக்கின்றன. இந்த பீனியல்பாடியின் வேலை பிட்யூட்டரிக்குத் துணை புரிவதே என்று தெரிகின்றது. "மூர்த்தி சிறிது, கீர்த்தி பெரிது" என்பார்கள். அது முற்றிலும் இந்தப் பிட்யூட்டரி கோளத்துக்குத் தகும்.

இது ராஜகோளமாக இருந்து கொண்டு சில அதிகாரங்களை நேரிலும், சிலவற்றை "தைராய்ட்" என்னும் பிரதம மந்திரி கோளத்தின் மூலமாகவும் நடத்துகின்றது. மற்ற மந்திரி கோளங்களெல்லாம் தைராய்டை அனுசரித்து நடக்கின்றன. ஆனால் எல்லாவற்றின் லகானும் பிட்யூட்டரியின் கையில் இருக்கின்றது. அது சுமார் இருபது வகையான முக்கிய காரியங்களைச் செய்கின்றது என்று கண்டு பிடித்திருக்கின்றனர்.

நமது சரீரத்தில் பல அவயவங்கள் இல்லாமல் நாம் வாழ முடியும். கைகள் இல்லாமல் இருந்தாலும் வாழ முடியும். கால்கள் இல்லாமல் இருந்தாலும் உட்கார்ந்தவாறே நாட்களைக் கடத்தலாம். கண்கள் இல்லாமல் ஜீவிக்கலாம். காது கேளாமல் நடமாடலாம். பல் இல்லாமலும் இருக்கலாம். மூக்கு இல்லாமலும் இருக்கலாம். மற்றும் ஏதாவது உள் அவயவங்கள் சீர் கெட்டாலும் அவைகளை எடுத்து விட்டு அரை குறை வாழ்வு வாழலாம். இரைப்பை கெட்டால் அதைத் தனியாய்த் துண்டித்து ஆகாரக் குழாயிலிருந்து சிறு குடலுக்கே ஆகாரம் நேராய்ப் போகும்படி செய்து விடுகிறார்கள். சிறு குடல் கெட்டால் அதை அடைத்து, ஆகாரப் பையிலிருந்து நேரே பெரிய குடலுக்கே ஆகாரம் போகும்படி செய்து விடுகிறார்கள். பெரிய குடலே கெட்டால், நேராய் சிறு குடலிலிருந்து மலத் துவாரத்திற்குப் போக வழி செய்து விடுகின்றனர். பித்தப் பை பழுதடைந்தால், அது வேண்டியதில்லை என்று வெட்டி எடுத்து விடுகின்றனர். கெட்டுப் போன மூத்திரக் காயை அகற்றிவிட்டு ஆரோக்கியமான மூத்திரக் காயை வைத்து விடுகின்றனர்.

பல் போனால் என்ன! பீங்கான் பல்லுடன் முன்னிலும் அழகாய்ச் சிரிக்க முடிகிறது. கண் போனால் கண்ணாடிக் கண்களுடன் காட்சி அளிக்க முடிகிறது. கால், கைகள் போனால், மாற்று மரக் கை, கால்களுடன் வாழ முடிகிறது. இருதயத்தை உடலிலிருந்து எடுத்துச் சீர்திருத்த முடிகிறது. அதைச் சீர்திருத்தும் வரை பிளாஸ்டிக் இருதயம் வைத்து அதன் வேலை கெடாதபடிக்குப் பார்த்துக் கொள்கின்றனர். முன் மூளை, பழுது பட்டு எடுத்து விட்டவர்களும் உண்டு. மண்டையோடு உடைந்தால் வெள்ளி மண்டையோடுடன் வெளியில் வருகின்றனர். காது கேளாவிட்டால் தான் என்ன! அதற்கும் ஒரு மின்சாரக் கருவி இருக்கிறது. அதைப் பொருத்திக் கொண்டால், காது கேட்க முடிகிறது. ஏன்! சுருண்டு போன தைராய்ட் கோளத்தையே எடுத்துவிட்டு, வாலிபக் குரங்கின் தைராய்டை வைத்துப் பொருத்தி இளமை அடையவில்லையா! எலும்புகள் நொறுங்கினாலும், உடைந்தாலும் உலோக எலும்புகளால் வாழ முடியவில்லையா! இம்மாதிரி விஞ்ஞானமானது பல அற்புதங்களை எல்லாம் சாதித்து வருகின்றன. இவைகளையெல்லாம் சௌகரியமுள்ளோர் அடையவும் செய்கின்றனர். ஆனால் பிட்யூட்டரி கெட்டால் அதை மாற்றவோ பழுது பார்க்கவோ முடியாது. அதை உடலிலிருந்து எடுத்துவிட்டால் ஒரு சில வினாடிகளில் உடல் அடித்துக் கட்டையாய் விடும். அவ்வளவு முக்கியத்துவமும் நுண்ணிய தன்மையும் படைத்தது.

பிட்யூட்டரி, தன் வேலையைச் சரியாய்ச் செய்தால் தான் மனிதன் மனிதனாக இருக்க முடியும். அது தாறுமாறாக வேலை செய்தால் மனிதன் எட்டு பத்து அடி உயரம் கூட ராட்சதனைப் போல வளருவான். அது வேலையே செய்யாமல் சூம்பிப் போனால், மனிதன் இரண்டு மூன்று அடிக்குள்ளாக இருந்து விடுவான். ஆகவே மனிதனின் வளர்ச்சிக்கும் இந்தக் கோளத்திற்கும் சம்பந்தம் இருக்கிறதென்று தெரிகிறது.

இந்தப் பிட்யூட்டரியிலிருந்து பல மருந்துகளைத் தயார் செய்து உபயோகிக்கிறார்கள். தாய்க்குப் பால் சுரக்கச் செய்வதும் இந்த பிட்யூட்டரியின் வேலையே. ஆகவே இதன் ரசத்தினாலான மருந்தைக் காளை மாட்டிற்குக் குத்தி ஏற்றினால் காளை மாடு கன்றை ஈயாவிட்டாலும், பாலைக் கொடுக்கிறதாம். குள்ளமானவர்கள் ஒரு வாரத்தில் ஒரு அங்குல உயரம் வளரலாம் என்று விளம்பரத்தில் காணுகின்றோமே! அதுவும் இந்த ரசத்திலிருந்து தயார் செய்ததுதான். ஆனால், அதன் சேர்க்கை, பக்குவம் முதலியன திட்டமாய் அமைந்திருக்க வேண்டும். இல்லையானால் உடலைக் கெடுத்துப் பலவித இன்னல்களை உண்டாக்கும். இவைகளை

யெல்லாம் டாக்டரின் பார்வையின் கீழ் சாப்பிட வேண்டியவைகள். அப்படிக்கின்றி உயரமாய் வளர வேண்டுமென்று கணக்கின்றி வாங்கிச் சாப்பிட்டுப் பலர் பல இன்னல்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். நரம்புத் துடிப்பு, தலை யிடி, அளவுக்கு மீறிய இருதயத் துடிப்பு, களைப்பு, பதட்டம், நடுக்கம், ஏன்! சிலருக்கு மூர்ச்சையாதல் முதலியனவும் ஏற்படும்.

மற்றும் ஒரு விதத்தில் இந்த பிட்யூடரியிலிருந்து எடுத்த மருந்தை உபயோகிக்கிறார்கள். ஸ்திரீகளுக்குப் பிரசவ சமயத்தில் சிலருக்குப் பிரசவ வேதனையே உண்டாகாது நின்று விடும். அப்பொழுது இரண்டு ஜீவன்களுக்கும் ஆபத்துத்தான். அப்பொழுது இந்தப் பிட்யூடரியிலிருந்து தயாரித்த மருந்தை ஊசியின் மூலம் குத்தி ஏற்றுவார்கள். உடனே வேதனை ஏற்பட்டுக் குழந்தை பிறக்கும். சில ஸ்திரீகள் முழு மாதங்கள் கர்ப்பத்தில் குழந்தை வளர்ந்தால், குழந்தை பெரிதாகிப் பிரசவ கஷ்டம் அதிகமாகுமென்று ஒரு மாதம், இரண்டு மாதங்களுக்கு முன்பே பிரசவிப்பதுமுண்டு. "இது என்ன! இஷ்டமான போது பிள்ளையைப் பெற முடியுமா!" என்று தோன்றுகின்றதல்லவா! இந்தப் பிட்யூடரி ஊசியைக் குத்தினால் இஷ்டமான போது பிரசவ வேதனையை உண்டாக்கிக் கொள்ளலாம்.

ஆணுக்கு ஆண்மையையும், பெண்ணுக்குப் பெண்மையையும் அளிப்பது இந்தப் பிட்யூடரியே. பிட்யூடரி தன் வேலையை மாறுபட்டுச் செய்தால், ஆண்களுக்கு மீசை வளராது. தாடைகளில் ரோமம் வளராது. பெண்களைப் போன்று மிருதுத் தன்மை ஏற்படும். குரலும் பெண்களைப் போல் மாறி விடும். சிலருக்கு ஆண்மையிருக்காது.



கணவன் :—நேற்று இரவு ஒரு கனவு கண்டேன். நகைக் கடை ஒன்றில் ஒரு வைர அட்டிகையும் வைர பேஸரியும் ரொம்ப பேஷாக இருந்தன. உனக்குப் பேஸரியை வாங்கி வந்தேன்!

மனைவி :—நன்றாயிருக்கிறது! இன்னும் கொஞ்சம் தூங்கிவிட்டு அந்த வைர அட்டிகையையும் வாங்கி வரக் கூடாதோ!

அதே மாதிரி பெண்களுக்கும் பிட்யூடரி மாறுபாடடைந்தால், ஆண்களைப் போல் மீசை வளரும். முரட்டுத்தனமும் ஏற்படும். குரலும் ஆண் குரலைப் போல் மாறும். சில வருடங்களுக்கு முன் பத்திரிகைகளில் ஒரு வெளிநாட்டுச் செய்தி வந்தது. ஒரு பெண் கலியாணம் செய்துகொண்டு இரண்டு குழந்தைகளைப் பெற்றாளாம். பிறகு சிறிது சிறிதாகப் பெண்மை குறைந்து ஆணாக மாறி விட்டாளாம். பிறகு ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டு இரு குழந்தைகளுக்குத் தகப்பன் ஆனாளாம்! சிறிது காலத்தில் மறுபடியும் பெண்ணாய் மாறி விட்டாளாம்! ஆக அந்தப் பெண் தாயாகவும், தகப்பனாகவும், மனைவியாகவும், புருஷனாகவும், இருந்தது விந்தையென்றாலும் அது ஆச்சரியப்படக் கூடிய விஷயமல்ல. எல்லாம் இந்தப் பிட்யூடரி கோளத்தின் விசித்திரப் போக்குதான்.

மற்றும் பெண்கள் வீட்டு விலக்காவதற்கும் இந்தப் பிட்யூடரிக்கும் சம்பந்தமுண்டு. இது சரியாக வேலை செய்யாவிட்டால், பெண்கள் பதினெட்டு இருபது வயது ஆனாலும் ருதுவாக மாட்டார்கள். சிலருக்கு நான்கு மாதம், ஆறு மாதத்திற்கு ஒருதடவை ஏற்படும். மற்றும் பல இன்னல்களெல்லாம் ஏற்படும்.

இம்மாதிரி உடலில் நடக்கும் பல முக்கியமான காரியங்களுக்கெல்லாம் இந்தப் பிட்யூடரியே மூலகாரணமாக அமைந்திருக்கின்றது. சில காரியங்களை நேராய் இருந்து தானே நடத்தி வருகிறது. சில காரியங்களை மற்ற கோளங்களைக் கொண்டு நடத்தி வருகின்றது. அப்பேர்ப்பட்ட ஜீவாதாரமான கோளம், என்றும் எப்பொழுதும் ஆரோக்கியமாக இருக்க வேண்டியது அவசியமல்லவா! அது ஆரோக்கியமாய் இருக்க வேண்டுமானால், வேறு எதனாலும் அதன் ஆரோக்யத்தை அபிவிருத்தி செய்ய முடியாது. ரத்த போஷணை கிடைத்தால்தான் அது ஆரோக்கியமாய் இருக்க முடியும்.

இத்தனை முக்கியமான இந்தப் பிட்யூடரிக்குத் தன் வேலைகளை நடத்தத் தனி நரம்பு இணைப்புகள் கிடையாது. உடலெங்கும் பாய்ந்து வரும் ரத்தம் தன்னிடம் வந்து செல்லும்போது அதில் அதன் ரசமான சக்தியைப் பொழிகிறது. ரத்தத்துடன் அதன் ரசம் கலந்து உடலெங்கும் செல்லுகிறது. அந்தந்த இடத்தில் இருக்கும் கோளங்கள், அவயவங்கள் அதற்கு வேண்டியவைகளை இயற்கை விதிப்படி பெறுகின்றன. பிறகு அந்தச் சத்தைத் தன்னுடையதாக்கி, தன் தனிப்பட்ட குணங்களைக் கலந்து வெளியாக்குகின்றது.

ஒரு மனிதனுக்குப் பிட்யூடரியானது நாற்பது நாற்பத்தைந்து வயது வரைதான் சரியாய் வேலை செய்யும். அதன்பின் ரத்தபோஷணை குறைவதால் அதன் சக்தியும் குன்றும். அப்பொழுது முதுமை ஏற்படுகிறது. வயதாய் விட்டதென்கிறோம். இந்த மூப்பை வெல்ல, சரீர அவயவங்கள் எப்பொழுதும்போல் மாறாமல் வேலைசெய்ய நாம் இயற்கையுடன் ஒத்துழைத்து, அதனை மாற்றவேண்டும். அதுதான் சிரசாசனம் என்பது. தலைகீழாக நின்றால், இயற்கையின் ஆகர்ஷண சக்தி ரத்தத்தைத் தன்னிடம் அதிகம் இழுக்கிறது. அப்பொழுது பிட்யூடரிக்கும், பினியல் பாடிக்கும் நன்றாய் ரத்த போஷணை கிடைக்கிறது. அதனால் அது என்றும் இளமை மாறாமல் அதன் காரியம் சரிவர நடக்குமென்பதற்கு நமது யோகிகளே சாட்சிகளாவார்கள். (தொடரும்)

# நளினியின் தியாகம்

**வேங்கடலட்சுமி**

ஆயிற்று ; எனக்கும் வயது கிட்டத்தட்ட ஐம்பத்தைந்தை எட்டிப் பிடித்து விட்டது. என்னுடைய வாழ்க்கைச் செடி தளிர்விட்டு அரும்பினவுடன் மலராமலே கருகிவிட்டது. வாழ்க்கையில் இனிப்பு இருக்கிறதென்பது சொல்லளவில்தான் எனக்குத் தெரியும். ஏனெனில் அவ்வினிப்பை நான் நுகர்ந்ததே யில்லை. என் மட்டில் வாழ்க்கையில் முதலில் துவர்ப்பும் பிறகு கசப்பும்தான் நான் கண்டது.

நேற்றைய தினம் என்னுடைய அலமாரியை ஒழித்துக் கொண்டிருந்தேன். பழைய கடிதங்களுக் கிடையிலிருந்து என் தோழி நளினியின் படமொன்று என் கையில் கிடைத்தது.

அதைப் பார்த்ததும் என்னுடைய நினைவுகள் பத்து வருஷங்களுக்குப் பின்னால் பாய்ந்து சென்றன. அவளை நான் கடைசியாகச் சந்தித்த சந்தர்ப்பத்தை நினைத்துப் பார்த்ததும் என் மனதை என்னவோ செய்தது.

உலகத்தில் பெரிய பெரிய மகான்களெல்லாம் எவ்வளவோ மகத்தான தியாகங்களைச் செய்திருக்கிறார்களென்று கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால் அவற்றில் ஒன்றாவது என் அருமை நளினி எனக்காகச் செய்திருக்கும் தியாகத்துக்கு ஈடாகுமோ வென்பது சந்தேகம்தான்.

## 2

சிறு வயதிலேயே நாங்களிருவரும் பள்ளிச் சிநேகிதிகள். எப்பொழுதும் சேர்ந்தே இருப்போம்: ஒன்று, என்னை அவள் வீட்டில் காணலாம் ; இல்லாவிட்டால் அவளை எங்கள் வீட்டில் காணலாம். எவ்வளவோ கர்நாடக மனுஷியான என் பாட்டி கூட எங்கள் சிநேகத்துக்குத் தடங்கல் சொல்லவில்லை.

வீட்டில் செய்யும் பட்சணம் பலகாரமெல்லாவற்றிலும் நளினிக்குப் பங்குண்டு. அதேமாதிரி, அவள் தாயாரான அருள்மேரி யம்மாளும், அவர்கள் வீட்டில் செய்யும் பிஸ்கோத்து, கேக் வகையறாக்களெல்லாம் எனக்கென்று பிரியமாக எடுத்து வைத்திருந்து கொடுப்பார்கள்.

எத்தனையோ வருடங்கள் இப்படியாக ஓடி விட்டன. துக்கமும் சோகமும் உருவான இவ்வுலகத்தில், நாங்களிருவரும் களி மிகுந்து கூவும் வானம்பாடிகளைப்போல் படிப்பதும் விளையாடுவதும், தூங்குவதுமாகக் கவலையற்று இருந்து வந்தோம். என்றாவது ஒரு நாள், மகா கொடுமையான துக்கமும் கஷ்டமும் எங்களையும் அணுகுமென்றும், நாற்புறமும் சூழ்ந்து அழுத்தித் திணற வைக்கும் பெருந் துக்க சாகரத்தில் விழுந்து கரை காணாமல் தத்தளிப்போமென்றும் எண்ணியதே கிடையாது. நாட்கள் ஓட்டமாக ஓடிச் சென்றன.

எனக்குப் பதினைந்து வயது. பாட்டி என்னுடைய கல்யாணப் பேச்சை ஆரம்பித்து வைத்தாள். அப்பா ஜாதகக் கட்டுக்களைத் தூக்கிக் கொண்டு அங்குமிங்கும் ஓடி அலைந்தார். எப்படியோ கஷ்டப்பட்டு வரன் பார்த்துக் கல்யாணத்தையும் நடத்தி விட்டார்கள்.

என் புக்ககம் நல்ல பணக்காரர் வீடு. காசு பணம் தாராளமாக நடமாடியது. என் புருஷரும் நல்லவர் ; பெண்களின் மனதைக் கவருவதற்கு வேண்டிய வசிய மந்திரங்களெல்லாம் கற்று வைத்திருந்தார். ஆகவே நான் லகுவாகவே அவர் வலையில் விழுந்து விட்டேன். கல்யாணமான ஒரு வாரத்துக்கெல்லாம் அவருடன் கிளம்பினேன். அவரை அம்பாலாவுக்கருகில் ஏதோ ஒரு கரும்பாலையில் மானேஜராகப் போட்டிருந்தார்கள். பங்களா, மோட்டார்கார் எல்லாம் இலவசமாகக் கொடுத்திருந்தார்கள். ஆகவே எங்களுடைய இல் வாழ்க்கைக் கலப்பற்ற இனிமையுடையதாகவே இருக்குமென்று என் அப்பா, அம்மா, என் தோழி நளினி எல்லாரும் கருதினார்கள்.

புறப்படுவதற்கு முன் தினம் மாலை. நளினியும் அவள் தாய் அருள்மேரியம்மாளும் என்னைப் பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். நளினி என் அறைக்கு வந்தாள். கதவைச் சாத்திவிட்டு நாங்கள் இருவரும் ஏதோ விஷயங்களெல்லாம் பேசித் தீர்த்தோம். அவள் தாயார் என் பாட்டியுடனும் அம்மாவுடனும் பேசிக் கொண்டிருந்தாள். கடைசியில் அவள் வீட்டுக்குப் புறப்படும் சமயம் வந்தது.

நளினியின் விழிகளில் நீர் ததும்பியது. என் கழுத்தில் தன் கைகளைச் சுற்றி வளைத்துக்கொண்டு என் கன்னத்தில் தன் முகத்தைப் பதித்துக் கொண்டாள். எனக்கும் அழுகை பொங்கி வந்து விட்டது. தேம்பித் தேம்பி அழலானேன். என் வாழ்க்கை பூராவும் அழுகைதான் என்பதற்கு அது அடையாளம் போலும் !

"அழாதே, தாரா ! புருஷனுடன் முதலில் மண வாழ்க்கை ஆரம்பிக்கப் போகிறவள் கண்ணீருடனா புறப்படுவது !" என்று மேலுக்கு என்னைச் சமாதானப் படுத்தினாளே தவிர, அவளுடைய கண் கலங்கிப் போய் இமைகள் நனைந்து பளபளத்துக் கொண்டிருந்தன. எந்த நிமிஷமும் அழுகை குமுறிக்கொண்டு வரும் பரிதாபமான நிலையில் தான் அவளும் இருந்தாள்.

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தோம். "தாரா !" என்றாள் நளினி.

"என்ன !" என்று கோபமாகக் கேட்டேன்.

"உனக்கு எப்பொழுதாவது, ஏதாவது ஆழ்ந்த கஷ்டமோ, துக்கமோ உண்டானால் நீ என்னிடம் தயங்காமல் உதவியை வேண்டலாம். இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்" என்று சொல்லி என்னை அன்போடு அணைத்துக் கொண்டாள்.

எனக்கு விவரிக்க முடியாத ஒரு உணர்ச்சி உண்டாயிற்று. நளினியை அப்படியே தாவிப் பிடித்துக் கொண்டேன்.

இதற்குள் என் தாயார் கூப்பிடும் குரல் கேட்டது. நான் நளினியிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றேன்.

## 3

அன்று மாலை என் கணவருடன் பிரயாணமானேன். என் தாயார் தகப்பனாருடன் என் அருமைத் தோழி நளினியும் என்னை வழியனுப்புவதற்காக ஸ்டேஷனுக்கு வந்திருந்தாள்.

"என்னை மறந்து விடாதே தாரா; அடிக்கடி கடிதம் போட்டுக் கொண்டிரு" என்றாள்.

என்னால் பேசமுடியாமல் தொண்டை அடைத்துக் கொண்டது. கணவனுக்கெதிரில் அழக்கூடாதென்று பல்லைக் கடித்துக் கொண்டே தலையை யசைத்தேன். என் கணவரும் அவளிடம் புன்சிரிப்புடன் விடைபெற்றுக் கொண்டார். நானும் எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டேன். வண்டியும் புறப்பட்டு விட்டது.

மூன்றாவது நாள் அம்பாலா போய்ச்சேர்ந்தோம்.

என் கணவர் ஒரு வாரம் வரையில் என்னிடம் மிகவும் பிரியமாயிருந்தார். அதற்குப் பிறகுதான் அவருடைய முரட்டுக் குணங்கள் வெளிவந்தன. எடுத்ததற்கெல்லாம் வீட்டில் சண்டையும் ரகளையும்தான். கோபவெறியில் வாயில் வந்தபடி யெல்லாம் ஆபாசமாகத் திட்டுவார்.

ஒவ்வொரு சமயம் என்னைக் கண் மண் தெரியாமல் அடிப்பார். மூக்கு, முகமெல்லாம் வீங்கி விடும். வேலைக்காரர்களெல்லாம்கூட என் நிலைமைக்குப் பரிதாபப்படுவார்கள்.

இதெல்லாம் என் பெற்றோருக்குத் தெரியாது. கனியிடமிருந்து மட்டும் அடிக்கடி ஆறுதலாகக் கடிதங்கள் வரும். என் கணவருக்குத் தெரியாமல் அந்தக் கடிதங்களைப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டு அவற்றை அடிக்கடி படித்துப் பார்த்து ஆறுதலடைவேன். என் உயிர்த் தோழியிடமிருந்து வந்த கடைசிக் கடிதம் அவளுடைய விவாகமும் முடிந்து விட்டதாகவும் மலேயாத் தீவிலுள்ள சிங்கப்பூருக்கு அவள் கணவனுடன் போகப் போவதாகவும் எழுதியிருந்தாள். அப்புறம் அவளுடைய கடிதம் ஆறு மாதம் கழித்துத்தான் எனக்கு வந்தது. தன் கணவர் டாக்டரென்றும், தங்கமான குணம் படைத்தவரென்றும் அவரைப் புகழ்ந்திருந்தாள். போகட்டும்; என் உயிர்த்தோழியாவது மண வாழ்க்கையில் இன்பம் காணுவது எனக்கு மிகவும் சந்தோஷத்தையும் நிம்மதியையும் கொடுத்தது.

திடீரென்று என் தலையில் பேரிடி விழுந்தது. மோட்டாரில் இரவு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த என் கணவர் ராணுவ லாரியொன்றுடன் மோதி அவ்விபத்தில் இறந்து விட்டார். என் பெற்றோர்கள் துடித்துக்கொண்டு ஓடிவந்தார்கள். என்னைப் பார்த்து அலறித் தவித்தார்கள். ஆனால் என் மனம் மட்டும் கல்லாகி விட்டது. துர்க்குணமும் குரூரமுமே உருவான புருஷனுடன் இரண்டு வருடங்களாக நான் நடத்திவந்த வாழ்க்கை என்னிடமிருந்த மனித உணர்ச்சிகளான பச்சாத்தாபம், துயரம், இரக்கம் முதலிய குணங்களை அடியோடு அழித்து விட்டன. நான் கல்லால் செய்த ஒரு மனித யந்திரமாய் விட்டேன்.

ஆறுமாதக் கர்ப்பிணியாயிருந்த என்னை அழைத்துக் கொண்டு என் பெற்றோர்கள் மிகுந்த துயரத்துடன் ஊருக்குத் திரும்பினார்கள்.

சில மாதங்களுக்கெல்லாம் என் மகன் பிறந்தான். அழகாய்க் கொழு கொழுவென்றிருந்த குழந்தை, என் பெற்றோரின் துயரத்தைச் சற்று மறக்கடித்து வந்தான். ஆனால் என் மட்டில், தகப்பனைக் கொள்ளாமலிருக்க வேண்டுமே பிள்ளை, என்ற பயங்கர கவலைதான்.

நாலு வருஷங்கள் சென்றன. குழந்தை தன்னுடைய சிரிப்பினாலும் விளையாட்டினாலும், இரும்பின் கடினம் பெற்றுவிட்ட என் மனத்தைக்கூட நெகிழச் செய்து விட்டான். அவன் விஷயமாக ஆரம்பத்தில் வெறுப்பையே கொண்டிருந்த நான் இப்பொழுது அவனையே என் உயிராகக் கருதலானேன். தகப்பனின் முகச் சாயலை மட்டுமே கொண்டிருந்த என் மகன், குணத்துக்கு அவரைச் சற்றேனும் கொள்ளவில்லையென்ற விஷயம் எனக்கு அளவில்லாத மகிழ்ச்சியையும் ஆறுதலையும் உற்சாகத்தையும் கொடுத்தன.

கனிக்கு நான் எழுதும் கடிதங்களெல்லாம் என் குழந்தை ரவியைப் பற்றியதாகவே யிருக்கும். அவனுக்காக நான் வைத்திருந்த ஆசைகள், அவனுடைய வருங்கால வாழ்க்கைக்காக நான் வகுத்திருந்த திட்டங்கள், அவனை என்னென்ன விதமான படிப்புக்கெல்லாம் அனுப்ப வேண்டுமென்றிருந்த என் அபிலாஷைகள் எல்லாம் பக்கம் பக்கமாக என் தோழிக்கு எழுதும் கடிதங்களில் கொட்டித் தீர்த்து விடுவேன். அவளும் ஆசையோடு எனக்குப் பதில் போடுவாள்.

அடாடா! சொல்ல மறந்து விட்டேன். கனியும் ஒரு ஆண் குழந்தைக்குத் தாயானாள். அவன் ரவியைக் காட்டிலும் ஒரு வயது இளையவன். ஜோஸப் என்று பெயர் என்பதாக கனி எனக்கு எழுதியிருந்தாள். அவளுடைய கடிதம் முழுதும் அவள் மகனைப் பற்றியும் என்னுடைய கடிதங்களெல்லாம் என் மகன் ரவியைப் பற்றியும் தானிருக்கும்.

என்னுடைய கஷ்டமெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டிருந்த சமயத்தில் பயங்கரப் பேரிடிகள் என் தலையில் விழுந்து சிதறின.

ஊரில் பரவிய அம்மை நோய்க்கு என் பெற்றோரிருவரும் அடுத்தடுத்துப் பலியானார்கள். அடுத்த இரண்டு தினங்களில் என் கண்ணான செல்வம், என் கண்மணி, என் அருமைக் குமாரன் ரவி, என்னைக் கதறவிட்டுப் போய் விட்டான்.

நான் அழுதேன், புலம்பினேன், மோதிக் கொண்டேன்; பாழும் யமன் என்னை மட்டும் விட்டுவிட்டு என்



செல்வங்களையெல்லாம் இரக்க மற்றுத் தன்னிடம் அழைத்துக் கொண்டான்.

என் வாழ்க்கைச் செடி அடியோடு கருகிப் போய்ப் பிடி சாம்பலாய் விட்டது. ஒரு மாதத்துக்கு பின் என் அருமைத் தோழி நளினிக்குக் கடிதம் எழுதினேன். அவளிடமிருந்து ஒரு தந்தி வந்தது. அதில் அம்பாலாவுக்குப் புறப்படும் தினம் நான் அவளுக்குக் கொடுத்த வாக்குறுதியை நினைவூட்டி, என்னை உடனே சிங்கப்பூருக்கு வந்து விடுமாறு அழைத்திருந்தாள்.



நானும் சில காலம் அங்கெல்லாம் சுற்றி விட்டு வந்தால் ஆறுதலாயிருக்குமென்று தீர்மானித்துக் கிளம்பி விட்டேன் யாருமில்லாத தனிக் கட்டையான நான் இனிமேல் எங்கிருந்தால் என்ன !

## 4

விமான நிலயத்துக்கு நளினியும் அவள் கணவரும் வந்திருந்தார்கள். என்னுடைய உலர்ந்த உடம்பையும் குழிந்து போன கன்னங்களையும் கண்ட நளினி என்னைக் கட்டிக் கொண்டு கோவெனக் கதறி விட்டாள்.

வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். பெரிய பங்களா, சுற்றிலும் காயும் பூவும், கனியுமாகக் குலுங்கிய தோட்டம். கைகட்டி நிற்கும் ஆட்கள், எல்லாமாக நல்ல செல்வநிலையிலிருக்கிறார்களென்பதை எனக்குத் தெரியப்படுத்தின.

வீட்டுக்குள் நுழைந்தவுடன் முதல் கேள்வியாக "நளினி ! உன் மகனைக் கூப்பிடு, அவனை எனக்குப் பார்க்க வேண்டும்" என்றேன்.

ஒரு வினாடி நளினிக்கு என்னுடைய கேள்வி காதில் விழவில்லை. நான் மீண்டும் கேட்டவுடன் திரும்பிப் பார்த்தவளாய் "சொல்ல மறந்து விட்டேன் தாரா. ஜோஸப் ஜோஹோரிலிருக்கும் அவன் அத்தை வீட்டுக்குப் போயிருக்கிறான் ; இன்னும் ஒரு வாரத்தில் வந்து விடுவான் !" என்றாள்.

"போ நளினி, நான் வருவது தெரிந்து கூட நீ ஏன் அவனை அத்தை வீட்டுக்கு அனுப்பினாய்!" என்று கோபித்துக் கொண்டேன்.

"இல்லை தாரா ! அவன் இங்கிருந்து போய் இரண்டு நாள் கழித்துத்தான் உன் கடிதம் எனக்குக் கிடைத்தது. இல்லாவிட்டால் நான் அவனை அனுப்பியிருக்க மாட்டேன். இன்றைக்கே அவனைப் புறப்பட்டு வரும்படி எழுதுகிறேன். ஒரு வாரத்தில் வந்துவிடுவான், பார் !" என்றாள்.

என்னை உற்சாகப் படுத்துவதற்காகவும் என் மனதை வேறு வழியில் திருப்புவதற்காகவும் நளினியும் அவள் கணவரும் எடுத்துக் கொண்ட சிரமம் கொஞ்சமல்ல. கடந்து போன என் வாழ்க்கையைப் பாழாக்கிய விபத்துக்களைக் குறித்து அவர்கள் ஒன்றும் பேசவில்லை. ஏற்கெனவே வெம்பித் தவித்துப் புண்ணாய்க் கிடந்த என் உள்ளத்தை மீண்டும் நையச் செய்ய அவர்கள் விரும்பவில்லையென நான் உணர்ந்து கொண்டேன்.

ஒரு வாரம் சென்றது. என்னை எங்கெங்கெல்லாமோ அழைத்துப் போனாள் நளினி. வீட்டிலும் எனக்காக என்னென்னவோ வேடிக்கை விநோதங்களெல்லாம் ஏற்பாடு செய்திருந்தாள். வருவோரும் போவோருமாக, அவர்களுடைய வீடு எப்பொழுதும் ஜே, ஜே என்று மிகவும் குதூகலமாக இருந்தது.

வார முடிவில் "நளினி ! ஜோசப் எப்பொழுது வருவான் !" என்று கேட்டேன். ஒரு வினாடி திகைத்து நின்றாள் நளினி. பிறகு சட்டென்று தனக்கு எப்பொழுதுமே இயற்கையான புன்னகையுடன், "இன்னும் இரண்டு மூன்று நாளில் கண்டிப்பாக வந்து விடுவான்" என்று சொன்னாள்.

எனக்கு என்னவோ போலிருந்தது. ஒரு வினாடி யோசனை செய்து விட்டு. "நளினி எனக்கொன்று தோன்றுகிறது. நாமே ஜோஹோருக்குப் போய் அவனை அழைத்து வந்தாலென்ன !" என்று ஆவலோடு கேட்டேன்.

"வேண்டாம், வேண்டாம். அவனுடைய அத்தை நல்ல பணக்காரி ; அடிக்கடி ஆரோக்ய ஸ்தலங்களுக்குப் போய் விடுவாள். நாம் ஜோஹோருக்குப் போவது வீண்தான்" என்றாள்.

நான் மீண்டும் ஏதோ சொல்ல வாயெடுத்தேன். அச்சமயத்தில் சொல்லி வைத்தாற் போல் உள்ளே நுழைந்தார் அவள் கணவர்.

"நளினி ! எலிசபெத்திடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. அவர்களெல்லாரும் ஜோசப்பையும் அழைத்துக் கொண்டு சுமத்ராவுக்குப் போயிருக்கிறார்களாம். அங்கிருந்து வர இன்னும் ஒரு மாசமாவது ஆகுமாம்" என்றார்.

சட்டென்று என்னைத் திரும்பிப் பார்த்த என் தோழி "பார்த்தாயா நான் சொன்னது சரியாய்ப் போச்சு !" என்றாள்.

"சரிதான் போ ; கடைசியில் உன் மகனைப் பார்க்காமலே நான் இந்தியாவுக்குத் திரும்பி விடுவேன் போலிருக்கிறதே !" என்று நான் அதிருப்தியுடன் சொன்னதும் நளினி தன் கணவரைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் எனக்கு விளங்காத மர்மம் ஏதோ இருப்பதாகத் தோன்றியது.

* * *

அன்று பகல் ஒரு விநோதமான சம்பவம் நிகழ்ந்தது. பகல் போஜனத்துக்கு மேல் நான் என்னுடைய அறையில் இளைப்பாறிக்கொண்டிருந்தேன். என்ன முயன்றும் என்னுடைய எண்ணங்கள் பழைய சம்பவங்களுக்கே ஓடிப்போனமையால் நளினியிடமாவது போய்ப் பேசிக்கொண்டிருக்கலாமென்று நினைத்து மெதுவாக அவளுடைய அறைக்குப் போனேன்.

திறந்திருந்த பீரோவண்டை நின்று எதையோ தேடிக்கொண்டிருந்த நளினி என்னுடைய காலடிச் சத்தம் கேட்டதும் சட்டென்று திரும்பிப்பார்த்தாள். அவளுடைய முகத்தைப் பார்த்த எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. எக்காரணம் பற்றியோ அவள் அழுது கொண்டிருந்தாளென்பதைத் தெரிந்து கொண்டேன்.

என்னுடைய வருகையால் அவளும் குழப்பமடைந்து விட்டாளென்று தெரிந்தது. பீரோவின் கதவைச் சட்டென்று சாத்திவிட்டு, "காலையிலிருந்து ஒரே மண்டை யிடி. தலைவலி மருந்தை ரொம்ப நேரமாகத் தேடுகிறேன், கிடைக்கவே

யில்லை. கொஞ்சம் பொறு, தாரா. அவரிடம் போய் வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்று அறையை விட்டு வேகமாக வெளியே போனாள்.

அவள் போவதையே உற்று நோக்கிய எனக்கு அளவற்ற வியப்பும் கலவரமும் தோன்றியது. ஏதோ ஒரு துக்கத்தை நளினி என்னிடமிருந்து மறைப்பதாகத் தெரிந்து கொண்டேன்.

அப்பொழுது கீழே கிடந்த ஒரு சிறு புத்தகத்தின் மீது என் பார்வை விழுந்தது. குனிந்து அதைச் சட்டென்று கையிலெடுத்துப் பார்த்தேன். அது ஒரு ஆங்கிலப் பாட புத்தகம். அதன் மேலட்டையில், 'ஜோசப்' என்று குழந்தையின் கையட்சரங்களில் எழுதப்பட்டிருந்தது. அப்புத்தகம் நளினியின் மகனுடைய தென்பதைத் தெரிந்து கொண்டேன். நளினி அலமாரியைத் திறந்த பொழுது அது கீழே தவறி விழுந்திருக்க வேண்டும்; அப்படியானால் அது ஜோசப்பின் அலமாரியா! அதைத் திறந்து வைத்துக் கொண்டு தான் நளினி அழுது கொண்டிருந்தாளா? ஏன் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

எப்படி யெப்படியோ ஓடியது என் எண்ணம். ஒன்றும் விளங்காமல் மூளை குழம்பியதுதான் மிச்சம். எப்படி யிருந்தாலும் இனிமேல் அவளாகச் சொன்னால் ஒழிய நளினியை ஒன்றும் கேட்ப தில்லை யென்று என் அறைக்குத் திரும்பிவிட்டேன்.

சற்றுப் பொறுத்துத் தாரா கூப்பிட்டாள்.

நான் போனபொழுது அவள் முகம் கழுவி வேறு உடை யணிந்து வெளியே போகச் சித்தமா யிருந்தாள். சற்று முன் அங்கு நடந்தவற்றைக் குறித்து அவள் ஒன்றும் சொல்லவில்லை.

அடுத்த இரண்டு வாரங்கள் கழிந்தன. நான் இந்தியா திரும்ப வேண்டிய நாளும் வந்தது.

என் மனத்தில் மட்டும் என் பிரிய தோழி நளினியையும், சுமத்ரா தீவுக்கு அவள் அத்தையுடன் உல்லாசப் பிரயாணம் சென்றிருக்கும் அவளுடைய சிறிய மகன் ஜோசப்பைக் குறித்துமே சுற்றி வந்து வட்டமிட்டன.

## 5

"இடையில் நான் ஜோசப்பைப் பார்க்காமலே திரும்பிப் போகிறேன்" என்று என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நளினியிடம் வருத்தத்துடன் சொன்னேன். நாங்கள் விமான நிலையத்துக்குப் போய்க் கொண்டிருந்தோம். நளினியின் கணவர் மோட்டாரை ஓட்டிக்கொண்டு வந்தார். லேசாகச் சிரித்தாள் அவள்.

"தாரா! நாங்கள் ஆறுமாத லீவில் இந்தியா வரப்போகிறோம்; அப்பொழுது ஜோசப்பை உன்னிடமே விட்டுவிட்டு நாங்களிருவரும் ஊரெல்லாம் சுற்றப் போகிறோம்" என்றாள் நளினி.

அவளுடைய கணவரும் சிரித்துக் கொண்டே, "ஆமாம்; அப்படித்தான்" என்று சொன்னார்.

நான் பதில் சொல்லவில்லை. இவர்கள் சொல்லுவது எவ்வளவு தூரம் உண்மையென்று ஆராய்வதில் என் மனம் ஈடுபட்டது.

எவ்வளவோ துக்கத்துடன் எனக்கு விடை கொடுத்தாள் நளினி. "இந்தியா வரும்பொழுது ஜோசப்பை நிச்சயமாக அழைத்துவா" என்றேன்.

இருவரும் சிரித்தார்கள்.

"கோபித்துக் கொள்ளாதே தாரா! உண்மையாகவே அவனை அழைத்துவந்து உன்னிடம் விட்டுவிட்டுப் போகிறோம்" என்றாள் நளினி.

புறப்பட்ட மூன்றாவது நாள் மாலை ஊர்வந்து சேர்ந்து விட்டேன். பூட்டியிருந்த கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் முதல் முதலாக என் கண்ணில் தென்பட்டது நளினியுடைய கடிதம்தான். நான் புறப்பட்டு வருவதற்கு இரண்டு தினங்கள் முன்பாக அதைத் தபாலில் சேர்த்து விட்டிருந்தாள் அவள்.

ஆவலுடன் கடிதத்தைப் படித்தேன்.

"என் பிரியமுள்ள தாரா,

பொங்கும் கண்ணீருடன் இதை உனக்கு நான் எழுதுகிறேன். ஏனெனில், உன் மகன் ரவி, உன்னிடமிருந்து செல்லுவதற்கு ஒருவாரம் முன்னால், என் கண்மணி ஜோசப், டைபாயிடு சுரத்தில் ஏசுநாதரின் திருவடிகளை அடைந்து விட்டான். ஏற்கெனவே நொந்து போய்க் கிடக்கும் உன் உள்ளத்தை மேன்மேலும் புண்படுத்த நான் விரும்பவில்லை. தவிர, தாரா!......உலகத்தில் நீ எல்லாவற்றையும் இழந்து விட்டாய். தாய், தந்தை, கணவன், மகன், எல்லோரும் உன்னை அனாதையாக்கி விட்டுப் போய்ச் சேர்ந்து விட்டார்கள். ஆனால் நானோ, மகனை மட்டும் தான் இழந்தேன். காலப் போக்கில் எனக்கு இன்னொரு மகன் பிறக்கலாமென்ற நம்பிக்கையு முண்டு. ஆனால் நீயோ, ஒன்றுமில்லாத பட்ட மரமாக ஆகிவிட்டாய். உலகில் உனக்கு இனி மேல் எவ்வகையான இன்பமுமில்லை.

ஜோசப் இறந்துவிட்டது தெரிந்தால் நீ இங்கே வர விரும்ப மாட்டாயென்பது எங்களுக்குத் தெரியும். ஆகவே அந்தத் துக்கமான விஷயத்தை உனக்குத் தெரியப் படுத்தாமலிருந்து விடுவதென்று நானும் என் கணவருமாகத் தீர்மானித்து விட்டோம். நீயும் சிங்கப்பூர் வந்தாய். ஜோசப்பின் விஷயத்தை உனக்குத் தெரியாமல் மறைக்க நாங்கள் என்னென்னவோ பொய்யெல்லாம் சொல்லும்படியாயிற்று. எங்கள் நண்பர்கள், வேலைக்காரர்கள் எல்லோரையும் எச்சரித்து வைத்திருந்தோம். உனக்காக, எலிசபெத் என்னும் ஒரு அத்தையைக் கூடக் கற்பனை செய்து விட்டோம். நீ கொஞ்சமாவது சந்தோஷமாக இருக்கும் பொருட்டே நாங்கள் இவ்வளவு பொய்யும் சொன்னோம். நீ எங்களை மன்னித்து விடு.

உன் பிரியமுள்ள,
நளினி."

இதைப் படித்துவிட்டு அப்படியே உட்கார்ந்து விட்டேன். கண்ணீர் மாலையாகப் பெருகியது.

"நளினி! நளினி!! நீயல்லவா உண்மைத் தோழி. யாரோ ஒரு அனாதைக்காக அருமை மகன் இறந்து போன விஷயத்தை மறைத்து. இந்த அனாதைக்கு உற்சாக மூண்டாக்கும் நிமித்தம் எப்படிப்பட்ட மகத்தான தியாகத்தைச் செய்திருக்கிறாய்! பச்சைப் பிஞ்சான குழந்தையைப் பறிகொடுத்துவிட்டு ரணமாயிருந்த உன் இருதயத்தை இறுக மூடிவிட்டு எனக்காகச் சிரித்துப் பேசி வளைய வளைய வந்தாயே! உன்னுடைய தீரத்தை எப்படிப் புகழ்வேன்! நளினி! நளினி!" என்று வாய்விட்டுக் கதறிவிட்டேன்.

* * *

இவ்விடத்தில் என் சிந்தனைச் சங்கிலி அறுந்தது. வாசலில் தபால்காரன் கூப்பிட்டான். கடிதம் நளினியிடமிருந்துதான் வந்திருந்தது. கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே வந்தேன்.

கையிலிருந்த புகைப் படத்தை அலமாரிக்குள் வைத்துவிட்டு என் தோழியின் கடிதத்தை ஆவலுடன் படிக்கலானேன். அதில் நளினியும் அவள் கணவரும் நான் சிங்கப்பூரிலிருந்து வந்த மறு வருஷம் பிறந்த அவள் மகன் ஜானுடனும் இந்தியாவுக்கு வரப் போவதாக எழுதியிருந்தாள். என் சந்தோஷத்துக்குக் கேட்க வேண்டுமா!






அது உட்புற சுத்தம் அளிப்ப தால், காலையில்
ஒரு கோப்பை நுரை விக்கும் ஆண்ட்ரூஸைப் பருகுங்கள்,
என்ன தான் வேலை நெருக்கடி யாயிருந்தாலும் அமைதியாக சுறுசுறுப்பாக இருக்க அது பெரிதும்
உதவுகிறது. ஆண்ட்ரூஸ் வாயையும் நாக்கையும் சுத்திகரித்து, வயிற்றைத் தூய்மை யாக்கி, குடலை
வலுப்படுத்தி மிருதுவாக குடல் சுத்தி அளிப்பதன் மூலம் உங்கள் சரீரத்திற்கே புதுமை உணர்ச்சி
அளிக்கிறது. எந்தச் சமயத்திலும் புத்துணர்வு அளிக்கும் பானமாக ஒரு கோப்பை நீரில்
ஒரு தேக்கரண்டி ஆண்ட்ரூஸ் போட்டு பருகலாம்.

# ஆண்ட்ரூஸ்

**மிகச் சிறந்த மலமிளக்கி**




**உங்களுக்குத் தெரியுமா ?**

—ஜீரணக் கோளாறு ஏற்பட்டால் ஏன் தலைவலி வரும் என்று ! ஜீரணமாகாமல் தங்கியுள்ள உணவுக்கழிவுகளிலிருந்து விஷம் வாயுக்கள் இரத்த ஓட்டத்தில் கலந்து மூளைக்குச் செல்கின்றன. அவை தலைவலி, எரிச்சல், உடற்சோர்வு ஆகியவைகளை ஏற்படுத்து கின்றன.

ஆண்ட்ரூஸ், வயிற்றில் ஹானிதரும் கழிவுப் பதார்த்தங்கள் சேராமல் பாதுகாத்து ஆரோக்கியத்தை அளிக்கிறது. உட்புற சுத்தத்திற்கு நன்றி.

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. "ரஜூலா"

## சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்

**சென்னையிலிருந்து பிப்ரவரி 12-ம் தேதி யன்றும்**
**நாகப்பட்டினத்திலிருந்து பிப்ரவரி 13-ம் தேதி யன்றும்**

மேற்கண்ட கப்பல் புறப்படலாமென எதிர்பார்க்கப்படுகிறது.

**கட்டண விகிதங்கள் :**

| | சென்னையிலிருந்து | | நாகப்பட்டினத்திலிருந்து | |
|---|---|---|---|---|
| | பினாங்கு | சிங்கப்பூர் | பினாங்கு | சிங்கப்பூர் |
| முதல் வகுப்பு | ரூ. 380/- | ரூ. 430/- | ரூ. 375/- | ரூ. 425/- |
| இரண்டாவது வகுப்பு 'A' | ரூ. 275/- | ரூ. 340/- | ரூ. 270/- | ரூ. 335/- |
| இரண்டாவது வகுப்பு 'B' | ரூ. 250/- | ரூ. 310/- | ரூ. 250/- | ரூ. 305/- |
| பேர்த் வசதியற்ற டிக்கெட் (சாப்பாட்டுடன்) | ரூ. 90/- | ரூ. 112/- | ரூ. 90/- | ரூ. 110/- |
| பேர்த் வசதியற்ற டிக்கெட் (சாப்பாடு இன்றி) | ரூ. 70/- | ரூ. 85/- | ரூ. 68/- | ரூ. 84/- |

**விசேஷ சுற்றுப் பிரயாண விகிதங்கள்—முதல் வகுப்பு மட்டும் :**

சென்னை—சிங்கப்பூர்—சென்னை ... ரூ. 890/-
நாகப்பட்டினம்—சிங்கப்பூர்—நாகப்பட்டினம் ... ரூ. 860/-

சிங்கப்பூரில் தாமதிக்கும் சமயம் கப்பலில் ஏற்படும் சாப்பாட்டுச் செலவுகளனைத்தும் கட்டணத்தில் சேர்ந்தது.

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூருக்கு கார்கோ சாமான்களை நேரடியாக ஏற்றிச் செல்லவும், பாங்காக், ஹாங்காங், ஜப்பான் மற்றும் தூரக் கீழ்த்திசையிலுள்ள இதர ஊர்களுக்குச் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி அனுப்பும்படியும் ஏற்றுக் கொள்ளப்படும்.

●

**இதர விவரங்களுக்குத் தயவு செய்து விண்ணப்பிக்கவும் :**

**பின்னி & கோ., (மதராஸ்) லிட்.**
7, அரமனைக்கார தெரு
மதராஸ்.

**மதுரா கம்பெனி லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோட்
நாகப்பட்டினம்






ICI

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா ?



மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உங்கள் பற்களை வெண்மையாகவும், ஈறுகளை ஆரோக்கியமாகவும், சுவாசத்தை இனியதாகவும் ஒரே சமயத்தில் விளங்கச் செய்கிறது.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையில் அடங்கியுள்ள பொருள்கள் வாயில் ஊறும் கெட்ட நீர்களையும் புளிப்புச் சத்தையும் கரைத்து பற்கள் பழுதடையாமல் காப்பாற்றி விகாரமான கறைகளையும் அகற்றி விடுகின்றன. இப்பொழுதே ஒரு டியூப் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை வாங்கி பிரதிதினமும் இரண்டு தடவை உங்கள் பற்களைச் சுத்தம் செய்து வாருங்கள்.

“பொறுமையைப் பெறத் தகுதி வாய்ந்தவர்களுக்கு நான் பெருமை தருகிறேன். பல வருஷங்களாக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன.”

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




வியாபார விவரங்களுக்கு: ஜெ.எல்.மாரிசன்,ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட் மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road. Kilpauk, Madras

இக் கைகள் எவ்வளவு திறம்பட
வேலைகள் செய்கின்றன. ஆனால்



... திறனுள்ள கைகள் கூட
அழுக்கடைகின்றன !




அழுக்கடைந்த கைகள்
மறைந்திருக்கும்
அபாயத்தைத்
தாங்குகின்றன !

அழுக்கில கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L 178-50 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

# நாளுக்கு நாள் அதிக தெளிவானதும் அழகானதுமான சருமம்

'ரெக்ஸோனுவிலி ருக்கும் 'கேடில்' உங்கள் சருமத்திற்கு புது ஆரோக்கியமும் எழிலும் தரும்.




## ரெக்ஸோனு

'கேடில்'• கலந்த சோப் இது ஒன்றே

• சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

ரெக்ஸோனு ப்ரொப்ரைடரி லிட்.க்காக இந்தியாவில் தயாரித்தவை R.P. 85-50 TM